உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி ௧௯.] துர்மதி-ஸ்ரீ ஆனி-மீ [பகுதி ௮.
Vol. XIX. June—July—1921. No. 8.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

௨

கடவுள் துணை.

செந்தமிழ்.

தொகுதி கக.] துர்மதி-ஹூ ஆனி-மீ [பகுதி அ.

Vol. XIX. June—July—1921. No. 8.

# சோதிடப்பொருத்தம்.



"சோதிடப்பொருத்தம்" என்ற தலைப்பின்கீழ்ப் பண்டித S. சுப்பிரமணியசாஸ்திரிகள் 'செந்தமிழில்' XVI-வது தொகுதி 309-வது பக்கம்முதல் 312-வது பக்கம்வரை, பரிபாடல் 11-வது பாடலிலுள்ள முதற் பதினான்குவரிகளை எடுத்துக்கொண்டு "இவ் விஷயத்திற் சோதிடத்திற் கரைகண்ட பண்டிதரவர்களுக்குச் சந்தேகம் சிறிதும் தோன்றாமையின், முற்காலத்துத் தமிழ் நூலாசிரியர்களுக்குச் சங்கீதத்திற்போன்று சோதிடத்திலும் ஒப்புயர்வில்லா வல்லமையிருந்ததென்றுமாத்திரம் அவர்கள் குறிப்பித்தனர். என்னைப் போன்ற சிலருக்கு ஆங்கு இரண்டொருசந்தேகங்கள் நிகழாநின்றன. சூரியனிருக்கும் இராசிக்கு முன்னே பின்னே இரண்டாவதாயுள்ள இராசிக்கப்பாற் புதன் செல்லுதலில்லையென்பதூஉம், மூன்றாவதாயுள்ள இராசிக்கப்பாற் சுக்கிரன் செல்லுதலில்லையென்பதூஉம் சோதிடநூல்கற்றார்யாவருக்கும் வெளிப்படையாம். சூரிய னுதயமாகும்போதும் அஸ்தமிக்கும்போதும் அதற்குச் சிறிதே விலகப்பெறும்புதனை நாம் ஏதோ சிலசமயங்களிற்றான் காணக்கூடும். ஆகவே அதனைச் சூரியனிருக்குமிராசிக்கு மூன்றாவதுஇராசியின்கட் காண்பது அசம்பவமேயாமெனத் தெரியவருகின்றது. சுக்கிரன் சூரியனிருக்குமிராசிக்கு நான்காவது இராசியிற் காணப்படவேண்டுமாயிற் சூரியனது உதயாஸ்தமயகாலங்களில் அதனை உச்சியிற்காணுதல் வேண்டப்படும். அஃதன்றியும் நடுப்பகலிலும் நடு இராத்திரி

பினும் சுக்கிரனது உதயாஸ்தமயங்கள் காணப்படுதலும்வேண்டும் அக்காலங்களில் அவற்றிற்குச் சம்பவமின்மையும் வெளிப்படையே யாம். "[illegible]" என்று வராகமிஹிரர்கூறியதும் இதற்குச் சான்றாகும். ஆகவே நமது பண்டிதரவர்கள் காட்டியபடிக்குச் சிங்கத்திற் சூரியனிருக்குங் கால் இடபத்திற் சுக்கிரனும், மிதுனத்திற் புதனுங் காண்டற்கு நியாயம் புலப்பட்டிலது. இதுவுமன்றி, "பாம்புமதியமறையவொல்லை வருநாளென்றது அவ்வாவணிமாதத்து மதிநின்றநாளாகிய வவிட்டத்தை யெனவே மதியு மிராகுவு மகரத்துநிற்க" என்று உரையாசிரியர் கூறுமாறு மகரத்து நிறைமதியையும் இராகுவையும் வைத்திடின் அது சூரியனிருக்கும் சிங்கத்திற்கு ஆறாவதே இராசியாவதுகொண்டும், ஏழாவது இராசியாகவிருந்தாலன்றி அது நிறைமதியாதற்குச் சம்பவமின்மைகொண்டும், அவிட்டத்தின் பிற்பகுதியெனக் கொள்ளின் அவை கும்பத்திருத்தலே பொருந்துவதாமெனக்கொண்டும் பல சந்தேகங்கள் பிறக்கின்றன." என்றும், பண்டிதரவர்கள் பக்ஷபாதமின்றி உண்மையைப் போதிக்கவேண்டுமென்றும் எழுதியுள்ளார்கள்.

சாஸ்திரியாரவர்கட்குத் தோன்றிய சந்தேகங்களாவன :—

i. ஆதித்தன் சிங்கத்தினிற்க வெள்ளி இடபத்திலிராதென்பது.

ii. ஆதித்தன் சிங்கத்திலிருக்கப் புதன் மிதுனத்திலிராதென்பது.

iii. ஆதித்தன் சிங்கத்தினிற்க, மதியம் மகரத்தினின்றால் பூரணமதியமாகாதென்பது;

iv. மதியம்நின்றநாள் அவிட்டத்தின் பிற்பகுதியெனக் கொண்டு கும்பத்திருத்தலே பொருத்தமுடைத்து என்பது.

இவ்வாசங்கைகட்கு இடந்தந்த பரிபாடற்பாட்டின் அடிகளைக் கீழே குறிக்கின்றேன்.

விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
வெரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையு
ளுருகெழு வெள்ளிவந் தேற்றியல்சேர
வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி

புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடிய
லங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குனி
னில்லத் துணைக்குப்பா லெய்த விறையமன்
வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
மதிய மறைய வருநாளில் வாய்ந்த
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
மிதுன மடைய விரிகதிர் வேனி
லெதிர்வரவு மாரி யியைகென விவ்வாற்றாற்
புரைகெழு சையம் பொழிமழை தாழ
நெரிதரூஉம் வையைப் புனல்.

இதற்கு ஆசிரியர் பரிமேலழகர்கண்டவுரையாவது:—இடபவீதி, மிதுனவீதி, மேடவீதி யென வகுக்கப்பட்ட மூவகைவீதியுள்ளடங்கிய இருபத்தேழுநாள்களுள், வெள்ளி இடபத்தைச்சேரச் செவ்வாய் மேடத்தைச்சேரப் புதன் மிதுனத்தில் நிற்கக் கார்த்திகை உச்சமாக விடிதலுண்டாக, குரு மீனத்தில்நிற்க, இயமனைத் தமயனாகவுடைய சநி மகரத்தில்நிற்க, ராகு மதியமறையும்படி வருநாளிலே, அகத்தியன் என்னுமீன் உயர்ந்த தன்னிடத்தைவிட்டு மிதுனத்தைப்பொருந்த முறுகினவெயிலையுடைய முறுவேனிற்குப் பின்வரும் கார்காலத்து மழைபெய்கவென்ற இவ் விதிவழியால் உயர்ந்த சையமலைக்கண் மழைபெய்ய மிகுதியாகவருகின்ற வையைப்புனல் என்பதாம்.

இவற்றைக் கீழ்க்காட்டும் இராசிச்சக்கரத்துட் காண்க.

| வியாழன் | செவ்வாய் | வெள்ளி | புதன் அகத்தியன் |
|---|---|---|---|
| | | | கேது |
| மதி சநி இராகு | | | ஆதித்தன் |
| | | | |

இனி, இப்பாட்டினைப் பாடியவர் ஆசிரியர் நல்லந்துவனார்; இவர் கலித்தொகையில் நெய்தற்கலியை இயற்றியதோடு கலித்தொகையைத் தொகுத்தும் தந்தவர். இதுவரையிற் கிடைத்த பரிபாடற்பாக்களில் (6, 8, 11, 20) நான்குபாக்களைப் பாடியவர்; அகநானூற்றில் நாற்பத்துமூன்றாவது செய்யுளைப் பாடியவர்; நற்றிணையில் 88-ம் பாடலைப்பாடியவர். இவர் வானசாத்திரத்திலும் சோதிடசாத்திரத்திலும் வல்லுநர் என்பது கலித்தொகையில் நெய்தற்கலியிலே உதாரணங் கூறுமுகத்தானே பரிதியையும் சோமனையும் அந்திக்காலத்தையுமே எடுத்து வெகுஅழகாகக் கூறியிருப்பதனால் விளங்கும். அது வருமாறு:—

"இன்றுணை நீப்ப விரவினுட் டுணையாகித்
தன்றுணைப் பிரிந்தயாஅந் தனிக்குரு குசவுமே
யொண்சுடர் ஞாயிற்று விளக்கத்தா னொளிசாம்பு
நண்பகன் மதியம்போ னலஞ்சாய்ந்த வணியாட்கு" (கலி-ச) என்றும்,

(இ-ள். இனியதுணையாகிய நீ கைவிட்டு உன்மனையிடத்தே இருக்கையினாலே ஒள்ளிய சுடரையுடைய ஞாயிற்றினது மிக்க ஒளியாலே தன்ஒளி கெடுகின்ற உச்சிக்காலத்து மதிபோலே நன்மைகெட்ட முகத்தினையுடையாட்கு இராக்காலத்திடத்தே தன்சேவலைப்பிரிந்து வருந்தும் தனிக்குருகு தான்துணையாகி உசவாநிற்கும் எ-று.)

"திங்க ளரவுறிற் றீர்க்கல்லா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய
லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்;" என்றும்,

(இ-ள். சான்றோர் திங்களைப் பாம்புசென்று மறைக்குங்கால் அதனை வருத்தத்தைத் தீர்க்கமாட்டாராயினும் அதன்மேற் றமக்குள்ளகாதலைக்காட்டித் தன்புறுவர்; அதுபோல இனிய மென்மையினையுடைய ஒண்டொடியது நோய்செய்யும் நோக்கிலே அகப்பட்ட என்னுடைய நெஞ்சிடத்துக் காமநோயைக் கண்ணாற்கண்டுவைத்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத தீர்க்கமாட்டாராயினும், கண்ணோட்டமாயினும் செய்தலிலர் எ-று)

அகம் 43-ல் "நாழிகைவட்டிலாற் பொழுதறிவதல்லது ஞாயிற்றை யறியப்படாத மழைக்காலம்" என்றும்

செய்யுள் இயற்றினரென்றால் இவரது சோதிடவல்லமை கூறுதற் கியலாததொன்றாம்; அன்றியும், மேலேகாட்டிய பரிபாடலில் அகத்திய ரென்னும் ஒரு கிரகத்தைப்பற்றி, அது தன்னுடைய நிலையைவிட்டு மிதுனத்தையடைந்ததென அழுத்தமாகக் கூறியுள்ளார். இதனைச் சாஸ்திரிகள் கவனித்திலர். அக்காலத்து இதற்கும் மற்றைக்கிரகங் களைப்போலப் பல னிருந்திருக்கவேண்டுமென்றாயிற்று. வராகமிகி ரர்காலத்து இதற்குப் பலன்கூறுமாறில்லை என்று பிருகத்ஜாதகத்தால் விளங்குகிறது. இவர்க்கு முற்பட்ட சூரியசித்தாந்தத்தில் எட்டா வது அத்தியாயத்தில் கிரகநக்ஷத்திர சமாகமத்திலே அகஸ்தியர் என னும் கிரகம் மிதுனத்தின்கடையில் 80-வது பாகத்திலிருக்கிறதென்று சொல்லப்படுகிறது. அதற்குப் பண்டித பாபுதேவசாஸ்திரிகள் எழு திய வியாக்கியானத்தில் அதனுடைய அக்ஷாம்சம் 90 பாகையென் றும், ரேகாம்சம் 80 பாகை தெற்கிலென்றும் கூறுவர். நம்புலவரோ "பொதியின்முனிவன் புரைவரைக்கீறி மிதுனமடைய" வென்பர். இதற் குரைகண்ட ஆசிரியர் பரிமேலழகர் "அகத்தியனென்னுமீன் உயர்ந்த தன்னிடத்தைக்கடந்து மிதுனத்தைப்பொருந்த" என்பர். இதனால் கடகத்தினின்றும் இது மிதுனத்தை அக்காலத்திலடைந் தது என்று புலப்படுகிறது. சூரியசித்தாந்தமுடையார் இது தன் காலத்தே இன்னும் 20 பாகை தள்ளிக்காணப்படுமென்றால் இப் பாவின் பழமையும் தொன்மையுஞ் சொல்லவும்வேண்டுமோ? அன்றி இதற்குள்ள பலன் பிருகத்ஜாதகம்போன்றநூல்களிற் காணப்பட வில்லையாயின் அது யாருடையகுற்றமோ? தமிழ்நூல்களிலிருந்து சொல்லக்கூடாதா? என்று பண்டித சாஸ்திரிகள் கேட்பார்களாயின், போலிவித்வான்களாக அநேகர்தோன்றித் தமிழின்பெருமையைக் கெடுத்தார் என்று துணிந்துகூறுவேம். அன்றியும்,

"வரணமுருவம்யோகமிசைகணக்கிரதஞ்சாலந்
தாரணமறமேசந்தந்தம்பநீர்நிலமுலோகம்
மாரணம்பொருளென்றின்னமான நூல்யாவும்வாரி
வாரணங்கொண்டதந்தோவழிவழிப்பெயருமாள"

என்பேம். இன்னும், பண்டித சாஸ்திரிகட்குத்தெரிந்த தஞ்சை ஸரஸ்வதிமஹால் என்னும் புத்தகநிலயத்துச் சின்னாண்முன்னர்வரை தமிழ்நூல்கள் என்னநிலையிலிருந்தனவென்பதை அவர்களே அறிவார்களாகையால், தமிழ்நூல்கள் போற்றுவாரும் காப்பாருமின்றி யிறந்தனவென்று துணிந்துகூறுவேம்.

இனி, பண்டித சாஸ்திரிகளது ஆசங்கைக்குவிடைபகரச் சூரிய சித்தாந்தம் ஸ்புடகதி அத்யாயத்தில் "ஒருகிரகமானது சீக்ரோச் சத்திநின்று 3 இராசிகள் விலகிப்போகுமானால் அக்காலத்தில் அது வலது அல்லது இடதுபக்கம் சாயும்" என்று காணப்படுகிறது. அன்றியும் வெள்ளி தனது வீடான ரிஷபத்தின் கடைசிப்பாகையான 60-ல் நிற்கச் சூரியன் சிம்மத்திற் பிரவேசித்திருப்பானானால் அது மூன்று இராசியே தள்ளிநின்றதாகும்.

திருவிளையாடற்புராணம் இந்திரன்முடிமேல் வளையெறிந்த படலத்திலே,

> காய்சினவெய்யோன்சேபோன்முன்செலக்கதிர்கால்வெள்ளித்
> தேசிகன்பின்புசென்றுநடக்குமிச்செயலான்முந்நீர்த்
> தூசினவுலகிற்பன்னீராண்டுவான்சுருங்குமென்று
> பேசினநூல்கண்மாரிபெய்விப்போர்ச்சென்றுகேண்மின்.

என்று காணப்படுவதுகொண்டும் வெள்ளி ஆதித்தன்பின்னர் வெகு தூரம்செல்லலும் இயல்பாம். அசம்பாவிதமன்று. இதனால் முதலிரண்டு ஆசங்கைகள் நிவர்த்தியாகின்றன.

இனி மூன்றாவது வினாவைப்பற்றி இரண்டுவிதசமாதானம் கூறலாம். ஒன்று, ராசிஒன்றுக்கு இரண்டரைத்திதியாக 6 ராசிக்குப் பதினைந்து திதியாகிறது. சூரியசித்தாந்தப்படியும் சந்திரன் பூரணமதியத்தில் 6 ராசியிலிருக்கும். இரண்டாவது,

> கோணிலைதிரிந்துநாழிகுறைபடப்பகல்கண்மிஞ்சி
> நீணிலமாரியின்றிவிளைவஃகிப்பசியுடீடிப்
> பூண்முலைமகளிர்பொற்பிற்கற்பழிந்தறங்கண்மாறி
> பாணியிவ்வுலகுகேடாமரசுகோல்கோடினென்றான்.

என்று சீவகசிந்தாமணியிற் காணப்படுகிறது. இதனையொட்டியே பகல்கண்மிஞ்ச இரவுகுறைந்து அதனனே நாழிகைகுறைவு படத் திதிகளும் குறைந்து 6 இராசிக்குள், பூரணமதியமுண்டாயிருக்கலாம். இவ்வாறு 6 ராசிக்குள் பூரணமதியமுண்டாவதியற்கையென்பது சென்ற ஆநந்தவருஷத்திலே வைகாசிமாசம் அமாவாசை கார்த்திகையில்வந்திருக்கப் பூர்ணமதியம் கேட்டையில்வந்துளது. கார்த்திகைமாதத்தில், சூரியன் விருச்சிகத்தில்நிற்க, மதியம் கார்த்திகையோடுசேர்ந்து பூரணமதியமாகுமாயின் ஆறு ராசிக்குள்வந்ததன்றோ! இதுகொண்டு சூரியனுக்கு ஆறுவது ராசியில் பூரணமதியமுண்டாவது இயற்கையென்பது வெளிப்படையாம்.

மேலேகூறியவற்றாற் பழந் தமிழ்ச்சரிதத்தை உற்றுநோக்குவோமாயின் அவை உண்மையென்பதும், நம்முன்னோர்களைவிட நாம் அறிவிற் சிறியரென்பதும், ஒன்றையும் நன்காராயாது குறைகூறுதல் சிறிதும் பொருந்தாவுரையாகுமென்பதும் போதரும்.

இனி இதுசம்பந்தமாக ஒரு விண்ணப்பம் செய்கிறேன்; அஃதியாதெனில் அகத்தியன் என்ற கிரகத்தின் தற்காலநிலையும், அதன் தினகதியும் இவ்வளவென ஆங்கிலபாஷாவிற்பன்னர்கள் தாமாகவோ அல்லது வானசாஸ்திர ஆராய்ச்சிச்சாலைகட்கு எழுதியோ தெரிந்து இச்செந்தமிழ்வாயிலாக வெளியிடுவார்களாயின் அது ஆசிரியர் நல்லந்துவனார்காலமும் அவராற் பாடப்பட்ட இப்பரிபாடல் கலித்தொகைகளின் காலங்களும் வச்சிரலேபமாகநாட்டப் பெருஞ்சாதனமாகும்.

இங்ஙனம்,

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர்—சோமசுந்தரதேசிகன்.

---

# அரிச்சந்திரசரிதையில் ஒருதிருத்தம்.

இன்று கிடைத்த சித்திரைமாதத்துக்குரிய செந்தமிழ்ப் பகுதியில், "செம்மைபண்மையில்" என்ற அரிச்சந்திரபுராணச்செய்யுளாராய்ச்சி ஸ்ரீமான் டி. என். அப்பனையங்காரவர்கள் நடத்தி யெழுதியிருப்பதின் கண், நூலின் அச்சுப்பிரதிகளிலும் சர்வகலாசங்கத்தார்பதிப்பித்த புத்தகங்களிலும் அச்செய்யுளின் 2-ம் அடியில் "மற்றிலம்புயத்தை" என்றச்சிட்டிருப்பது சற்று மொவ்வாதென்று நன்குவிளக்கிச் சுத்தபாடம் "மற்றிலைபுறத்தை" என்றிருக்கவேண்டுமென்று கூறியிருக்கின்றார்கள். அன்றியும், அச்செய்யுளின் ஈற்றுமொழியை "நோன்பெனக்கருதி" என்று பிழைபடப்படித்துப் பொருள்கூறுவாருமுளரென்றும், "நோன்பெமக்கறிதி" என்றே படிக்கவேண்டுமென்றும் வரைந்துள்ளார்.

நான் எழுதியதும் 'விவேகசிந்தாமணிப்பிரசுரங்க'ளிலொன்றாக 1896-ம் வருஷம் வெளிவந்ததுமான "சத்தியதேவதைகதை"யில் வாய்மையின்சிறப்புக்கூறுந்தருணமொன்றில், இச்செய்யுளை யெடுத்தோதியவிடத்து, இப்பொழுது ஐயங்காரவர்கள் சுத்தபாடமென்று வாதித்து நாட்டிய பாடங்களையே யானுங் கைக்கொண்டு, செய்யுளின் 2-ம் அடியினிறுதியில் "மற்றிலைபுறத்தைத்" என்றும், 4-ம் அடியினிறுதியில் "நோன்பெமக்கறிதி" என்று மெழுதியிருக்கின்றேன். (சத்தியதேவதைகதை 14-ம் பக்கம்).

1908-ம் வருஷம் திருப்போரூர்வித்வான். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள் முன்னிருந்த வழுக்களைக் களைந்து வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற் பதிப்பித்த பிரதியிலும், 'மற்றிலைபுறத்தை' என்றும், "நோன்பெமக்கறிதி" என்றும் அச்சிட்டிருக்கிறார்கள். ஆனால், அவ்வச்சுப்பிரதியிலடங்கிய திரிசிரபுரம் மகாவித்வான் ஸ்ரீ கோவிந்தபிள்ளையவர்கள் வகுத்தபொழிப்புரையில், இரண்டாமடியில் "அம்புயத்தை" என்றபாடத்தைத் தழுவியும், நான்காமடியில் நோன்பெனக்கருதி என்றே மூலத்தைப்படித்துப்புலையனும்விரும்பாத என்றசெய்யுளுடன் ஒருதொடராக்கியும் பொருளுரைக்கப்பட்டிருக்கிறது. (P. 303) மூலத்திற்கும் உரைக்குமுள்ள வேற்றுமை அவ்வச்சுப்பிரதி பதிப்பித்தோர்க்குவெளிப்படாதுநின்றது வியப்பே!

திருவநந்தபுரம்.
June 11th, 1921.

கே. ஜி. சேஷையர்.

ஸ்ரீ

# பாண்டிமண்டல சதகம்.



[இது, தொண்டமண்டலசதகம், சோழமண்டலசதகம், கொங்கு மண்டலசதகம் என்னும் சதகங்கள்போல நூறு கட்டளைக்கலித்துறைச் செய்யுட்களாற் பாண்டிமண்டலத்தின் வைபவத்தைக் காட்டக்கருதிப் பாடப்பட்டதொரு பிரபந்தமாகக் காணப்படுகிறது. இதன் ஏட்டுப்பிரதி யொன்று சங்கத்திலுள்ளது. இதனைப் பாடியவரது ஊர் பெயர் காலம் முதலிய விருத்தாந்தங்களொன்றும் விளங்கவில்லை. இதில் விஷயங்கள் முறைபெறக் கோக்கப்படவில்லை. இடையிடையே சிலபாடல்களிற் சொற்கள் பிழைபடப் பிரயோகிக்கப்பட்டுள்ளன. சிற்சில அடிகளில் எழுத்துக்கள் கூடவும் குறையவும் தளையோசைசிதையவும் எழுதப்பட்டிருக்கிறது. சிலபாடல்களிற் சில அடிகளும் தொடர்களும் சிதைந்து குறைந்துள்ளன. ஆயினும், தமிழ்மண்டலத்திற்சிறந்த நம் பாண்டி மண்டலவைபவத்தைப் பாராட்டுதலால் இதிலுள்ள விஷயங்களி லொரு சில ஆராய்ச்சிக் குபயோகமாகுமென்றெண்ணி இதிலிருந்து தெளிவான பாடல்களே எட்டிதுள்ளபடி இங்கு வெளியிடப்படுகின்றன. சுத்தப் பிரதிகிடைத்தால் முற்றும் வெளியிடலாகும்.]

## காப்பு.

திங்கண்மும்மாரிபெய்யத்தென்னவன்செங்கோலோங்க
மங்களம்பொலியும்பாண்டிமண்டலசதகம்வாழ்க
சங்கமாமதுரைமூதூர்ச்சங்கரர்சடையின்மீதிற்
கங்கையார்பெற்றசித்திக்கணபதிகாப்புத்தானே, (க)

தண்டமிழ்வழங்கத்தென்னன்றனிச்செங்கோல்தழைக்கப்பாண்டி
மண்டலசதகமென்னும்வடிதமிழ்வளர்ந்துவாழ்க
அண்டர்கள்முனிவோர்மாந்தர்க்கருள்செய்யவமிர்தரூபங்
கொண்டவர்பரங்கொண்டாரூங்குமாரனைவணக்கஞ்செய்வாம். (உ)

(அவையடக்கம்.)

அண்டவர்தந்தசங்கத்தமர்ந்தவர்க்கடங்காக்கீர்த்திப்
பாண்டிமண்டலத்தைத்தானேபாடுவேன்பாவைபங்கர்
தாண்டவமாடுவார்முன்பேயாடித்தடுப்பதேபோல்
பூண்டபோராவின்முன்னம்பூநாகமாடல்போலும். (௩.)

[நூல்.]

பூமாதுபொன்னன்புயத்தினின்மேவிப்பொலிந்திருக்க
நாமாதுசங்கப்பலகையிலேறிநலம்பெருக்கக்
கோமான்மலயத்துவசமன்பெற்றகுமாரியெனு
மாமாதுரீதிபராசாளும்பாண்டியன்மண்டலமே. (க)

விகடம்புரிதிக்குப்பாலரைவென்றுவிசயமண்ட
முகடொன்றுமும்முலைப்பெண்மாமணஞ்செய்துமுரியந்தேர்
பகடம்புரவிபூழ்ந்தசௌந்தரபாண்டியனைய்
மகுடம்புனைசொக்கர்செங்கோல்செய்பாண்டியன்மண்டலமே. (உ)

பழுதும்பொன்மேருவிற்செண்டுங்கயலும்பதித்துவைய
முழுதுந்தன்கொற்றக்குடையால்நிழற்றிமுறைபுரிந்தே
யுழுதுஞ்செந்தேனுண்டுவண்டாடும்வேம்பணியுக்கிரப்பேர்
வழுதியென்றுமுருகன்காக்கும்பாண்டியன்மண்டலமே. (௩)

தென்றிசைமேலும்வடதிசைதாழவுந்தேவிமண
மன்றுசெய்கின்றவாணாகத்தியரேபொதிகைக்
குன்றினிலேகுமெனவுந்தமிழ்ப்பொதிக்கூடல்வெள்ளி
மன்றினில்வந்துசமானஞ்செய்பாண்டியன்மண்டலமே. (௪)

தண்டமிழ்கொண்டுசிவத்தலம்விட்டுத்தலம்விளக்கி
யெண்டருமுற்சங்கமேறியிலக்கணலக்கியஞ்செய்து
குண்டிகைநீர்கொண்டுகாவேரிதந்துகொழுந்தமிழின்
மண்டலங்கண்டகுறுமுனிபாண்டியன்மண்டலமே. (௫)

ஒருகவிக்கோரொருதேங்காய்பொன்னாற்செய்துருட்டிக்கல்வி
பெருகச்செய்நாவலர்வாழக்கொடுத்துப்பிரதாபம்பெற்றான்
திருமலிதஞ்சையிற்கோவைத்தமிழ்கொண்டுசெல்வமிக
வருதருவாகியவாணனும்பாண்டியன்மண்டலமே. (௬)

ஏரோக்குஞ்செஞ்சொலகப்பொருணூலுக்கிலக்கியமாய்
நேரோக்கவாமுமிரட்டையர்பாடிநிறுத்தவவர்
பூரிக்கத்தஞ்சைநற்கோவைகொண்டேமெச்சிப்பொக்ஷநிதி
வாரிக்கொளச்சொன்னவாணனும்பாண்டியன்மண்டலமே. (௭)

தெரிபுலவோர்தம்மதுரைமட்டாய்ச்செல்லச்சென்றபொதி
யெருதினிலேற்றிப்பொதித்தலஞ்சென்றதற்கேயஞ்சலாய்ப்
பெருமூரசார்த்திடக்கப்பல்நற்கோவைப்பிரபந்தங்கொண்ட
வருகருமாணிக்கன்வாழ்வானபாண்டியன்மண்டலமே. (௮)

மூவேந்தரிற்றன்னுடனிருந்தானெனமுன்முகிலைத்
தேவேந்திரன்முனிருவர்க்குநல்கிடத்தென்னனெனும்
பூவேந்தன்மேகம்விலங்கிடும்போதுபுயற்குப்பிணை
மாவேந்தன்முன்சொன்னவேளாளர்பாண்டியன்மண்டலமே. (௧௧)

ஈட்டுங்கொடியவரசர்கள்போர்செய்திடினுநதி
மேட்டிற்புகுந்துவந்தூர்புகுந்தாலுமிகவுயர்ந்த
கோட்டையைவிட்டுவெளியேவாரரென்றுகூறுகின்ற
வாட்டமில்லாதுறைவேளாளர்பாண்டியன்மண்டலமே. (௧௫)

பொருந்தியசீவிலிபுத்தூரின்மேவியபுண்டரிகத்
திருந்தருளேசெய்திடுநாச்சியாரம்மனென்பவளைத்
தரும்பெரும்பொன்மதிசீர்கருணைப்பெயர்தாங்குகின்ற
வரும்பெருமேன்மைகொள்வேளாளர்பாண்டியன்மண்டலமே. (௧௬)

வீசியதென்றறமிழோடுலாவும்வியன்மதுரை
யீசன்செங்கோல்செய்மகாசீர்த்திப்பாண்டியனின்பமுறத்
தேசியும்யானையுந்தேருங்கொடுத்துத்திருமுடிமேல்
வாசிகையும்புனைவேளாளர்பாண்டியன்மண்டலமே. (௧௭)

நந்தேறும்வாவிப்பெருந்துறையெல்லைநமக்கெனச்சொ
லிந்தேறுஞ்செஞ்சடையெம்மானுடனெதிரேற்றுக்கொண்டு
செந்தேனொழுகும்பொழின்மதுராபுரித்தென்னவன்முன்
வந்தேவளஞ்சொலும்வேளாளர்பாண்டியன்மண்டலமே. (௧௮)

அம்புராப்பார்முழுதுமுழுதேபயிராக்கிமுதிர்ந்
தின்புறத்தான்விளைநெல்லொடுதானியமீட்டியதைத்
தென்புலத்தோர்தெய்வமொக்கல்விருந்தொடுதென்னவனு
மன்பெறத்தந்தருள்வேளாளர்பாண்டியன்மண்டலமே. (௨0)

செந்நெல்முதிர்ந்ததுபொன்னாய்விளைந்திடச்சிந்தைமகிழ்ந்
தந்நெல்செலவிடல்போலேபுலவர்க்குமாதுலர்க்குந்
துன்னியகூலிக்கும்வேண்டியபேர்க்குநற்சுந்தரற்கும்
மன்னற்குநல்கியவேளாளர்பாண்டியன்மண்டலமே. (௨௨)

உழுதுண்டுவாழ்பவரேவாழ்பவர்மற்றுலகிலுள்ளோர்
தொழுதுண்டுபின்செல்பவரென்றுவள்ளுவர்சொன்னவரும்
பழுதன்றியேகம்பனாரேரெழுபதுபாடியதும்
வழுவொன்றிலாதவர்வேளாளர்பாண்டியன்மண்டலமே (௨௪)

உத்தமனாமவ்வழுதியைச்சோழனுயிர்கவர்ந்தே
பித்தலங்காக்குமவனிறந்தேவிடவிந்துகுலப்
புத்திரனாண்டிடவேளாளர்பொன்முடிநென்முடியை
வைத்தரசாட்சிகொடுத்ததும்பாண்டியன்மண்டலமே. (௨௫)

நளினப்புகழ்கின்றவெண்பாவைப்பாடிநன்னாட்கவிதை
களகத்தில்மிக்கபுகழேந்தியாங்கவிராசன்றன்னைத்
தளவப்பெருநகைமாதொடுதென்னவன்றான்மணஞ்செய்
வளவற்குச்சீதனமீந்ததும்பாண்டியன்மண்டலமே. (௨௬)

பொல்லாச்சமணரிடுந்துன்பநீறிட்டுப்போக்கிக்கடல்
கல்லாற்கடந்துபடிக்காசுவாங்கிக்கபாடந்திறந்
தெல்லாரும்பேறுபெறத்திருத்தாண்டவமேத்துமைபர்
வல்லாளராகியவேளாளர்பாண்டியன்மண்டலமே. (௩௪)

தேனலர்கொன்றையணிசிவன்கோயிலைச்செம்பொன்னினல்
[illegible]லமாகும்பிரகாரங்கோபுரந்தூபிமுத
[illegible]னபிலாதுபுரிவாயிலாமென்றுமுள்ளத்திலே
யானதபூசைசெய்வேளாளர்பாண்டியன்மண்டலமே. (௪0)

தெள்ளியசங்கப்புலவோரும்வாணியுஞ்செஞ்சடைமே
லொள்ளியகங்கைதரித்தோருங்கூடியொரோர்கவிதை
வெள்ளியசெஞ்சொற்குறட்பாவைக்கேட்டுவியந்துகொண்ட
வள்ளுவர்மாலைபகர்ந்தாரும்பாண்டியன்மண்டலமே. (சகூ)

மடலிற்றபுட்பமணிநாச்சியாரம்மன்மாமணஞ்செய்
திடமிக்கவாசையுடனேபுதுவையிற்சென்றுமென்று
அடல்பெற்றவேங்கடத்தாருமன்னருமழகருந்தென்
வடபத்திரசாயியுந்தானைபாண்டியன்மண்டலமே. (ருஉ)

பாலினும்வெண்ணெயினுந்தயிர்மீதினும்பசூம்வைத்த
வேலினுங்கூரியகண்ணுளசோதைதன்வீட்டிடத்து
மாலினும்வேலையினுந்துயில்சங்கத்தழகரெனு
மாலிருஞ்சோலைமலைபானும்பாண்டியன்மண்டலமே. (ருங)

திருவாய்மொழிதிருமேனியரானதுஞ்செந்தமிழால்
ஒருநான்மறையெனவோதியபாடல்கொண்டோங்குபதி
யிருலாலுபத்துமுடைத்தாகியெண்டிசையேற்றப்பெற்று
வருமால்திருப்பதியுள்ளதும்பாண்டியன்மண்டலமே. (ருஅ)

தேவிக்குமன்னவன்காப்பானென்றேகித்திரும்பிவந்து
மேவிக்கலந்தவிரவினிற்சோதிக்கவேந்தன்கிட்டிப்
பூவிற்பொலிகைவைத்தேகிடப்பூசுரன்போந்துதா
மாவிற்கைபொற்கைதருமாறன்பாண்டியன்மண்டலமே. (சூஉ)

புரிசைப்புறத்தினிற்சேரனுஞ்சோழனும்போர்புரிய
விரியச்சயங்கொண்டபோதினில்யாமினியீங்கிவனைப்
பரிசுக்குநல்லகவிபாடிநல்வரும்பாக்கியமென்றே
வரிசைத்தமிழ்புனைபாரியும்பாண்டியன்மண்டலமே. (சூங)

அகத்தியரேவிடவாட்சேபஞ்செய்ததங்கோட்டுமுனி
மிகக்களிகூரப்புலவோர்கள்வாழ்த்தவியன்மதுரைச்
செகத்தரசென்பவன்முன்னேதொல்காப்பியச்செந்தமிழை
மகத்துவமாயரங்கேற்றியபாண்டியன்மண்டலமே. (சூச)

மீனவன்வேதியர்பங்கைத்தடுக்கவிரைந்தனுமான்
குணாளநோக்குமனுவிரந்தானென்றுந்தண்டமிழைக்
கோணாளமேச்சக்கொடுத்துந்தம்பங்கினைக்கொண்டுமகிழ்
வானரவீரன்மதுரையும்பாண்டியன்மண்டலமே. (எஉ)

தேனேறுமின்சொலிராமாயணத்திற்றிருவழுந்தூர்
ஆனேறனையதமிழ்க்கம்பநாடனமைத்துவைத்த
தானேரில்கீர்த்திசெய்வெண்ணெய்நல்லூரிற்சடையனெனும்
வானேறுசீர்த்திகொள்வேளாளர்பாண்டியன்மண்டலமே. (எசு)

திருந்தியசீவிலிபுத்தூரில்ஞானத்திருவுருவாய்ப்
பொருந்துசொக்கேசரதிகாரமாய்வைத்துப்பூசைசெய்து
அருந்தவராகித்தருமபுரத்திலருள்புரிய
வருந்திருஞானசம்பந்தரும்பாண்டியன்மண்டலமே. (எஎ)

தென்னாடுமுத்துடைத்தென்றுமிதுவன்றிச்சோனாட
நன்னாடுகல்லென்றும்வல்லிருப்பாகுமுன்னாடென்றுந்தான்
சொன்னாவலர்புகழ்சோழன்முன்னேநின்றுசொல்லவுயர்
மன்னாளுநாடதுவன்றேதென்பாண்டியன்மண்டலமே. (அ0)

இடைக்காடர்முன்செலப்பின்செலுமீசனிருப்பதுபோத்
தடைக்கானகாட்டிமுட்டையென்றேபெறசாற்றிசெஞ்சொல்
தொடைக்கானபாடல்சொல்பொய்யாமொழிதொடுத்தேத்துமடி
மடக்கானபாடல்கொள்செவ்வேளும்பாண்டியன்மண்டலமே. (அக)

துரியோதனன்கன்னனச்சுவத்தாமன்றுரோணனொடு
பொருபாண்டவர்க்குச்செயமெனும்பாரதப்போர்முடித்துத்
திருமேவுபாகவதம்புரிலீலையுஞ்செய்மதுரை
வருமாலெதகுலக்கிட்டினனும்பாண்டியன்மண்டலமே. (அஅ)

பத்திராதிபர்.

---

# சிறைவிடந்தாதி.



[உசஅ-ம் பக்கத்தொடர்ச்சி]

ஏறுவான்மருப்படுசினப்பகட்டினுக்கெரியெனநோக்கியநோக்கிற்
கூறுசெம்புனன்முத்தலைச்சூற்படைக்குனக்கெனும்வெருவலுமுளதோ
வாறிரண்டுதோளறுமுகனறுதலத்தமர்ந்தவனடியர்க்காளானேன்
சீறிநின்றனையென்றனையென்செய்வாயந்தகாதிருப்புகநெறியே. (சகூ)

நெறியிலன்றருநெறிதருநிதியிலனின்னிலைநிலைமைதேர்ந்துணருங்
குறியிலன்குறிக்கொண்டொருவழிபடுகுறிப்பிலனிரங்குநாளுளதோ
செறிமுகிற்குலந்தடவரைநிவந்தெழுசிகரமால்வரைபிளந்துருவிப்
பறியவேற்படைதொடுத்தருண்முருகனேதனிமுதற்பாமதேசிகனே. (ருo)

வேறு

பாமாகியநின்பதபங்கயநின்
றிரவாதுகழிந்தனனித்தனைநா
ளரவாபரணன்றருமாறுமுகக்
காமாறிருதோடருகான்முனையே. (ருக)

கானுறுகடம்பணிநின்கருணைத்
தேனுறுகுடைந்திடர்தீர்குவனோ
வானுடருமற்றையவேனையருந்
தானுகிநிரம்பியசண்முகனே. (ருஉ)

முகமாறுமுகப்படுமாறுணரா
தகமாறுமசட்டுமுசுண்டருடன்
புகுமாறுதவிர்த்தருள்போதமணித்
தொகுமாறிருவேற்படுதோளினனே. (ருங)

தோளாமணியேசுடரிற்சுடரே
வாளாமறையேமறைமெய்த்தவமே
யாளாயெனிலாருளரஞ்சலெனத்
தாளாமலர்தந்தருள்சண்முகனே. (ருச)

தந்தாயர்தனித்துயர்போயொழியச்
சிந்தாயெனிலாருளர்தீவினையேற்
கெந்தாயமரேசனிருந்தவமே
கந்தாமுருகாகருணாகரனே. (ருரு)

கருமங்கருமஞ்செயல்காரணமெய்த்
தருமந்தருமப்பயனுமிவையே
யிருகுன்றினிளங்குறமங்கைதனம்
பொருகுங்குமதிண்புயபூதரனே. (௫௬)

பூதங்களுமண்டமுமெப்பொருளும்
வேதங்களுமேலுறுசிற்பரமும்
நீதந்தனவன்றியுநிற்பனவோ
மாதங்கமுகற்கிளைவாரணமே. (௫௭)

இளையாவிடரோடிருந்தவெனக்
குளையாவிடரோடவுணர்ந்திலையே
தளைவார்குழலம்பிகைதந்தருள்கான்
முளையேயருளாறுமுகக்களிறே. (௫௮)

ஆறுவிடர்கூறியறைந்தசெவிக்
கேறுதகொலெந்தைபிரானிளையாய்
மாறுநெடுவையகமன்பதையுட்
சிறுதுநிறைந்ததிகம்பரனே. (௫௯)

பாமீதுபராபரமீதுபரப்
பிரமாதியர்பேசுவதீதெனநின்
றிராவாமுருகாவெனநெஞ்சுருகார்
சாரோனுகமன்கைதுடக்குறுவார். (௬0)

வேறு

வாரேறுமிருகொங்கைமலைமங்கைகடனின்றவருவெங்கடுக்
காரேறுகளகண்டனிவரென்றமரவின்றுகளிமூழ்குவார்
போரேறுசினவாளெயிற்றுக்கருஞ்சூர்புரம்பாழ்படத்
தாரேறும்வடிவேல்விடுக்குந்தன்மகவென்றுதருமேன்மையே. (௬௧)

தருநாடுகுடியேறவிராணிமங்கலத்தாலிதழையச்
செருமாறியுருமேறமமரேசன்வெண்குடைத்திங்கள்விரியக்
கருமாயவசுரேசனுயிர்மாயவுடலுங்கதிர்க்காலவேன்
முருகாவுனைக்கொண்டுகேவலாதிருந்தார்கண்முத்தேவரே. (௬௨)

தேவாதிதேவதிருச்செந்திலூர்நின்றதேவர்க்கெலாங்
கோவாயளிக்குங்குணக்குன்றமேயெங்கள்குமரேசனே
யாவாவெனத்தன்படர்க்குந்தொறும்பாவியழுதேனுநின்
பூவாமலர்ப்பங்கயத்தாள்விடேனாவிபோனாலுமே. (௬௩)

(தொடரும்)

சு. நல்லசிவன்பிள்ளை,

ஸ்ரீ:

# விவாகரகஸியம்.



சத்தியவதி:—அம்மா! உன்னைப்பார்த்து வெகுநாளாயிற்றே. இன்று தான் என்மனங்களிப்படைகிறது.

காந்திமதி:— நம்முடையநட்பு, குறைபாதசெல்வமல்லவா? சாவித்திரியின்கதையைக்கேட்டதுமுதல் மறுபடியும் உன்னைப்பார்க்க வேண்டுமென்ற ஆவல் எனக்கு அதிகமாயிருந்தது.

ச:— தமோகுணத்திலாழ்ந்தவர்களுக்குக்கூட, அப்படிப்பட்ட பதிவிரதா சிரோமணிகளை நினைத்தமாத்திரத்தில் ஸத்வகுணம் மேலிடு மல்லவோ?

கா:—உண்மைதான். அதுமுதல் நமது சமயக்கோட்பாடுகளின் உண்மையானகருத்தை யறியவேண்டுமென்ற அவா எனக்கு மிகுதியாக வுண்டு.

ச:— எந்தவிஷயத்தில்.

கா:—அப்பொழுது சம்பாஷணையினிடையில் விவாக மந்திரங்களின் சாரமானபாகம் உன்னாற் சுருக்கிச் சொல்லப்பட்டதல்லவா?

ச:— ஆம்; அதில் மணமகனும் மணமகளும் ஒருவர்க்கொருவர் இவ்விதம் இருக்கவேண்டுமென்று உபதேசிக்கப்பட்டதல்லவா? அது மிகவும் இளமைப்பருவமுள்ள சிறுவர் சிறுமிகளால் எப்படியறிந்து கொள்ளக்கூடும். ஆதலால் இளமைப்பருவம் கழிந்தபிறகுதான் பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் விவாகத்துக்கு யோக்கியதை யுண்டாகிறதென்பது இக்காலத்தார் கொள்கை.

கா:—சூத்திரம்செய்த மஹரிஷிகளுடைய அபிப்பிராயமல்லவோ இது விஷயத்தில் முக்கியமாய்த் தெரிந்துகொள்ளவேண்டியது.

ச:— முக்காலமுமறிந்த மஹரிஷிகள் இந்த விஷயத்தில் தங்கள் உட்கருத்தை நன்றாய்வெளியிடவில்லை. ஆனாலும் விவாகத்தின் முறைகள், அவைகளில் உபயோகப்படுகிற மந்திரங்கள் இவைகளை நுட்பமாய் ஆராய்ச்சிசெய்து எளிதில் நீயே அறிந்துகொள்ளலாம்.

கா:—அப்படியானல் நீயே யெல்லாவற்றையும் எனக்குச்சொல்லவேண்டும்.

ச:— தோழீ! எனக்குத்தெரிந்தவரையிற் சொல்லுகிறேன். ஒருவன் முதலில் வேதத்தை முற்றுமோதிப் பயிற்சியடைந்தபின் பிரும்ம சரியவிருதத்தை முடித்துவிட்டுத் தனக்குப் பெண்பார்த்து நிச்ச யிக்கும்படி, மந்திரமறிந்தவர்களும் தன்னிடம் பிரியமுள்ளவர்களு மான நான்கு நண்பர்களை அனுப்பவேண்டும்.

கா:—எனக்கு இது உசிதமாகத்தோன்றவில்லையே; தனக்கிசைந்த நாயகி யைப் பிறர்கண்களாற்பார்த்து நிச்சயிக்கிறதென்பது பெண்ணுக் கும், பிள்ளைக்கும், பிறகு கஷ்டத்தைவிளைக்குமல்லவோ? ஒருவன் தானேபோய்ப்பார்த்துத் தனக்கிசைந்த நாயகியை என் வரிக்கக் கூடாது?

ச:— ஒருசமயம் அழகைமட்டும் கண்டு மோகித்து அவன் தனதுகோத் திரத்திற்குத் தகுதியற்ற இடத்திற் பிறந்தவளையும், நன்னடக்கை யற்ற தாயின்வயிற்றிலுதித்தவளையும் ஆலோசியாமல் மணந்து விடுவான் என்று கருதி, நண்பர்களே இந்தக் காரியத்தை நன்றாய் முடிக்கவல்லவர்கள் என்று மஹரிஷிகள் தீர்மானித்திருக்கலா மென்று நினைக்கிறேன்.

கா:— "யஸ்யாம் மநஶ்சக்ஷுஷோர்நிபந்தஃ தஸ்யாம் ருத்தி:"

"எந்தக்கன்னியைப்பார்த்தாற் கண்ணும் மனமும் களிப்படையுமோ அவளை மணம்புரியலாம்" என்று சில மஹரிஷிகளும், ஆகிருதியைக் கொண்டு குணங்களை அறியலாம் என்று சாமுத்ரிகாலக்ஷணம் தெரிந்தவர்களும் கூறியிருக்கிறார்களே?

ச:— அதனாலென்ன? நல்ல மனமுடைய நண்பர்களின் கண்களும் மன மும் லக்ஷணம் முதலியவற்றை நோக்கிப் பெண்ணைத்தேர்ந் தெடுத்து நிச்சயிக்கவேண்டுமென்பதுதான் என்கருத்து.

கா:—மெய்தான். பெரியோர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட தாரமென்று ஜானகியினிடத்தில் இராமனுக்கு அதிக அன்பு உண்டாயிற்றென்று வான்மீகி முனிவர் கூறியிருக்கிறார். இக்காலத்திலோ எல்லோரும் பெரும்பாலும் மிகவும் நேயமுள்ளவர்கள்போல் நடித்துத் தங்கல மொன்றையே கருதி யிடில்லாத பெண்ணையும் பிள்ளையையுஞ்

சேர்த்துவைத்து வஞ்சித்துவிடுகிறார்கள். இது மஹரிஷிகளுடைய பிழையல்லவே.

ச:– "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ"

"இவள் சீதை; என்பெண்; தர்மத்தையனுஷ்டிப்பதில் உனக்கு உதவிபுரியத் தகுதியுள்ளவள்" என்று இராமனைப்பார்த்து ஜனகர் சொல்லியவாக்கியத்தை ஆராயுங்கால், பெண்ணை மணம்புரிவது தர்மானுஷ்டானத்துக்காகவேயன்றிக் கேவலம் சுகானுபவத்துக்கு மட்டுமன்று—என்று நன்குவிளங்குகிறதே.

கா:–முன்காலத்தில் தர்மத்தையநுசரித்து வளர்ந்தது காமம். இக்காலத்திலோ காமத்தையனுசரித்து வருந்துகிறது தர்மம். இது தான் காலவித்தியாசம்.

ச:– பிறகு பெண்ணின் தந்தை முதலியோர் தம்வீட்டிற்கு மணமகனை யழைத்துவந்து கன்னிகையை அவனுக்கு உதகபூர்வமாய்த் தானம் செய்து மதுபர்க்கங்கொடுத்து மணமகனுக்கு மரியாதையும் செய்கிறார்கள்.

கா:–தோழி! எல்லாத் தானங்களையும் என் உதகபூர்வமாய்ச் செய்கிறார்கள்.

ச:– உதகத்தில் எல்லாத்தேவர்களும் சாந்நித்யமாயிருக்கிறார்களாதலால், தெய்வங்களின்முன்னிலையில் தானம்செய்வது உசிதமென்று நினைக்கிறேன். நாரம்—என்றால் ஜலம்; அயநம் என்றால் இருப்பிடம்; ஆனதுபற்றி, நாராயணன் என்னும் பதத்துக்கு ஜலத்தில் வாசஞ் செய்கிறவனென்று அர்த்தம் சொல்லுகிறார்கள்.

கா:–ஜலம் ஓரிடமிருந்து மற்றோரிடத்துக்குச் செல்லுந் தன்மையுடையதாகையால் அதனுடன் தானஞ் செய்யப்படுகிற கன்னிகை சம்பந்தமான எல்லாவித பாத்தியமும் ஒருவரிடமிருந்து மற்றொருவரிடத்துச் செல்லுகிறது என்பதற்கும் அடையாளமாயிருக்கலாம்.

ச:– இந்த யுக்தியும் நன்றாய்த்தானிருக்கிறது. மதுபர்க்கமென்றால் என்னவென்று உனக்குத் தெரியுமா?

கா:—தேனுடன் தயிர், நெய், அவல், மா முதலியவைகளைப் பாத்திரத்திற் சேர்த்துவைத்துத் தகுதியான விருந்தினர்க்குக் கொடுத்து உபசரித்தல் என்று சொல்லக்கேட்டிருக்கிறேன்.

ச:— இதைக்குறித்து விசேஷமாய்ச் சொல்லவேண்டிய பலவிஷயங்கள் உள்ளன. அவற்றைப்பற்றி வேறொருசமபம் பேசுவோம். பாணிக்கிரகணத்துக்குமுந்தி மணமகன் தன்னுடைய பிதிர்க்களை உத்தேசித்து நாந்திசிராத்தமொன்று செய்யவேண்டுமென்றுவிதித்திருப்பது உனக்குத் தெரியுமா?

கா:—இதென்ன விந்தையாயிருக்கிறது. கல்யாணத்தில் சிராத்தஞ்செய்யலாமோ? மங்களத்தில் அமங்கலத்தைச் சேர்க்கலாமோ? மஹாிஷிகள் ஏன் இப்படிவிதித்தார்கள். இதன் நியாயம் எனக்குப் புலப்படவில்லையே?

ச:— நல்ல கேள்வி; நானும் இந்தவிஷயத்தைக்குறித்து என் உபாத்தியாயரைக் கேட்டேன். அவரும், "அம்மா! பிதிர்க்கடனை நிவர்த்தி செய்யும்பொருட்டே விவாகம் ஏற்பட்டிருக்கிறது. அவர்களருளால் தான் நல்லசந்தான மேற்பட்டு வம்சம் தழைக்கவேண்டும். அதனால் நாந்திசிராத்தம் (பிதிர்க்களைச் சந்தோஷப்படுத்தும் சடங்கு) செய்ய வேண்டியது உசிதம்தான்" என்றார்.

கா:—ஆம். பொருத்தமாயிருக்கிறது. "சந்தானமுண்டாகவேண்டியதற்கான சடங்குகளை அநுஷ்டித்தார்; நல்லசந்தானமுண்டாவதற்காக இல்வாழ்க்கையைக் கைப்பற்றினர்" என்று இரகுவம்ச அரசர்களைக் குறித்துக் காளிதாசர் வர்ணித்ததில் விவாகத்தின் நுட்பமான கருத்து நன்கு விளங்குகிறது.

ச:— பிறகு மணமகன் மணமகளை முதலிற்பார்த்து "அப்ராத்ருக்நீம்' (அப்ராத்ருக்நீம்) என்று தொடங்குகிற மந்திரத்தைச் சொல்ல வேண்டும்.

கா:—மிகவும் நன்றாயிருக்கிறது. 'அப்ராத்ருக்நீம்' என்பதால் 'உடன்பிறந்தார் விஷயத்தில் ஸ்வபாவமாய் எனக்குள்ள நட்பைக் கெடுக்காமல் இருக்கக்கூடியமனதில்ல உனக்குவாய்க்கவேண்டும்' என்று பெண்ணைப் பார்த்து முதல் வார்த்தையாக மணமகன்சொல்லுவது மிகவும் உசிதமன்றோ? தந்தை தேடிவைத்த பொருளைப்பங்கிட்டுக்

கொள்வதில் உடன்பிறந்தோர்க்குள், கலகமேற்படுவதற்கு அவரவர் மனைவிமார்களே காரணம் என்பது உலகமறிந்ததன்றோ?

ச:- நீ சிறந்த புத்திசாலியென்று விளங்குகிறது.

"தெலெதெலெ கஒத்ராணி தெலெதெலெ உ வாம்யவாஃ।
தம் து தெலம் ந வஶ்யாஜி யத்ர ஹாதா ஸஹொதரஃ॥"

"எந்தத் தேசம்போனாலும் மனைவிகள் கிடைப்பார்கள். எந்தத் தேசத்திலும் சுற்றத்தார்களுண்டு. ஆனால் எந்தத்தேசம்போனாலும் ஒருவயிற்றிற் பிறந்த சஹோதரன் கிடைக்கமாட்டான்" என்று ஸஹோதரவாஞ்சையின் மேன்மையை ஸ்ரீராகவன் நன்கு உபதேசித்திருக்கிறார். இப்படியிருக்க மானிடர்கள் ஏன் மனையாட்டிகள் வசமாய் ஸஹோதரர்களுக்குத் துரோகம் செய்கிறார்கள்?

கா:-வேறென்ன? படிப்பில்லாமல் அவிவேகிகளாயும் அழுக்காறு முதலிய துர்க்குணங்களையே இயற்கையில் வாய்த்தவர்களாயுமிருக்கிறமனைவிமார்களுடைய தந்நலம்பாராட்டுந்தன்மையே ஸஹோதரர்களுக்குள் கலகம் நேரிட முக்யமானகாரணமாயிருக்கிறது.

ச:- பெண்பாலாகப்பிறந்த நீ இவ்விதம்பேசுவது உன்னுடைய கம்பீரமான மனநிலையை வெளிப்படுத்துகிறது.

கா:-உள்ளதைத்தான் சொன்னேன். அதற்காக என்னைத் துதிக்க வேண்டாம்; விவாகத்தில் மேல்நடக்குஞ் சடங்குகளையும் விடாமற் சொல்லவேண்டுமம்மா.

ச:- பிறகு மணமகன் மணமகளுக்குப்பக்கத்தில் நின்றுகொண்டு "அகோரசக்ஷு:" (அ஘ொரசக்ஷுஃ) என்று தொடங்குகிற மந்திரத்தைச் சரியானஸ்வரத்துடன் சொல்லிக்கொண்டு அவளுடைய கண்களிற் றன்கண்களை நாட்டிப் பார்க்கவேண்டும்.

கா:-இந்த மந்திரத்தினால் மணமக்கள் ஒருவரையொருவர் முதன் முதற் பார்த்துக்கொள்ளும் சமயத்தில் மனவொற்றுமை யுண்டாகுமென்று முனிவர்கள் கண்டுபிடித் திருக்கவேண்டும்.

ச:- பிறகு மணமகன் அணிவிரல் சுண்டுவிரல்களுடன் கட்டைவிரலைக் கூட்டி, அவற்றால் தருப்பையை எடுத்து, மணமகளைநோக்கி, "உன்னிடம் கணவனுக்குக் கெடுதிசெய்யும் அவலக்ஷணத்தை இதனால் போக்குகிறேன்" என்ற கருத்தடங்கிய மந்திரத்தைச்சொல்லிக் கொண்டு அத்தருப்பையினால் அப்பெண்ணின் புருவமத்தியத்தைத்துடைத்து மேற்குத்திசையில் அதை எறிந்துவிடவேண்டும்.

கா:-நன்றாய் ஆராயும்பொழுது, மந்திரத்துடன் செய்யப்படுகிற இந்தச் சடங்கினால், இமையாமற்பார்த்துச் சேஷ்டைகளாற் பிறர்மனத்தை வசமாக்குகிற தாந்திரிகர்களின் (Mesmerists) செய்கை நினைவுக்கு வருகிறது.

ச:- அதன்பிறகும், பிறந்தவீட்டிலிருந்து மற்றொருவீட்டுக்குப் போக வேண்டுமேயென்று மணமகள் விசனமடைந்தால் அப்பொழுது "ஜீவாம்ருதந்திம்" (ஜீவா௦ரு௨ஊதீ௦) என்று தொடங்குகிற மந்திரத்தைச் சரியானபடி சொல்லி அவளுக்கு மனதிற் களிப்பையுண்டாக்கவேண்டும்.

கா:-மந்திரங்களின் பெருமை நம்போலியர்கட்கு எளிதிற் புலப்படாது. அதனிடத்து எண்ணவொண்ணாதசக்தி இருப்பதாக மட்டும் தோன்றுகிறது.

ச:- பிறகு இரட்டைப்படையான வேதமோதிய அந்தணர்களைத் தெரிந்தெடுத்துத் தீர்த்தங் கொண்டுவரும்படி அனுப்பவேண்டும்.

கா:-பெண்களல்லவோ புனல்கொண்டு வருவதுவழக்கம்.

ச:- மந்திரஞ்சொல்லிக்கொண்டன்றோ உதகம் எடுக்கவேண்டும்.

கா:-நல்லது; மேல்நடப்பதென்ன?

ச:- பிறகு தருப்பைப்புற்களைச் சேர்த்து வட்டமாகக்கட்டிப் பெண்ணின் சிரசில்வைத்து அதன்நடுவில் நுகத்தடியின் வலப்புறத் தொளைவரும்படி பிடித்து அதிற் பொற்சுண்ணத்தைத்தூவிப் பரிசுத்தமுண்டாக்கக் கூடிய ஐந்து மந்திரங்களைச்சொல்லி அதன்வழியாய் நீர்நிறைத்து மணமகளை நீராட்டிப் புதியவஸ்திரமுடுத்தித் தருப்பைப்புல்லாற்செய்த புரியை மணப்பெண்ணின் இடையிற் கட்டவேண்டும்.

கா:–நல்லது மெல்லிய சரீரமுள்ள சிறியபெண்ணின் தலையில் வலிய நுகத்தடியின் வலதுபாகத்தை ஏன்வைக்கிறார்கள்? அது அபாயகாமல்லவோ?

ச:– "இன்று நான் இல்வாழ்க்கையிற் புகுகிறேன். அதில் தர்மத்தை யனுஷ்டிப்பதில் எனக்கு ஏற்படும் பாரத்திற் பாதியை நீ வகிக்க வேண்டும்" என்று மணமகன் மணமகளுக்கு நுகத்தடியினாற் சூசிப்பிக்கிறானென்று நினைக்கிறேன்.

கா:–நன்றாய் விளங்குகிறது. பொற்சுண்ணத்தை ஏன் தூவுகிறார்கள்?

ச:– "ஹிரண்யவர்ணா: சுசய: பாவகா:" (ஹிரண்யவர்ணா: ஶுசய: பாவகா:) என்றுதொடங்கி மேற்கூறிய சமயத்திற்சொல்லப்படுகிற மந்திரங்களைக் கவனித்தால்உதகம் பொற்சுண்ணத்தின் சம்பந்தத்தால் தங்கநிறமடைந்து சுத்தியாகிப் பெண்ணின் சரீரத்தைப் பரிசுத்திசெய்து அவளிடம் அபூர்வமான ஒரு சக்தியையும்உண்டாக்குகிறதென்று என் சிற்றறிவுக்குப் புலப்படுகிறது.

கா:–உன்னுடையநுட்பமான அறிவு மிகவும் வியக்கத்தகுந்ததே.

ச:– பிறகு மணமகளை வலதுகையினாற் பிடித்துக்கொண்டு அக்கினிக்கு முன்போய் அங்கு வடக்கு நுனியாகவிரித்தபாயில் வலதுபக்கத்தில் மணமகளுடன் மணமகன் அமரவேண்டும்.

கா:–மணமகள் மணமகனுக்கு வலப்பக்கத்திலேயே இருக்கவேண்டும் என்பதற்கு என்ன காரணம்?

ச:– புருஷர்களுக்குச் சரீரத்தில் வலப்பாகம் சிலாக்கியமென்று சொல்லுகிறார்கள். ஆதலால் அவர்கள் இவ்விதம் உட்காருவதால் மணமகன் பெண்ணிடம் மரியாதையுடனிருப்பதாக வெளியாகிறது என்று நினைக்கிறேன்,

கா:–நல்லது.

ச:– பிறகு அக்கினியைப் பூசித்து "ஸோம: ப்ரதம:" (ஸோம: ப்ரதம: முதலில் சோமன்' என்று தொடங்குகிற இரண்டு மந்திரத்தை மணமகளைத் தொட்டுக்கொண்டு மணமகன் ஜெபிக்கவேண்டும்.

கா:–ஜெபத்தின் கருத்தென்ன?

ச:- இந்த மந்திரத்தின் கருத்தையாராயுங்கால் முதலில் கன்னிகை சோமன், கந்தருவன் அக்கினி என்ற மூன்று தேவர்கள்வசம் முறையாக இருந்து, பின் மனிதன்வசமாவதாகத் தெரிகிறது. ஆதலின் மேற்கூறிய தேவர்களைத் துதித்து அவர்களநுமதிபெற்றுக் கன்னிகையை ஒருவன் மணம்புரியவேண்டுமென்பது கருத்து.

கா:-இதனுல் எல்லாப்பெண்களுக்கும் நான்குகணவர்கள் ஏற்படுவதாகத் தெரிகிறதே. இது சரியாகுமோ?

ச:- தேவர்களை நாயகர்களாகக் கொள்வதென்பதன் நுட்பமானகருத்தை ஆலோசித்தால்,பெண்ணின் ஞானேந்திரியங்களையும் கன்மேந்திரியங்களையும் அந்தந்த இந்திரியங்களுக்குரிய தேவர்கள் விருத்தி செய்து அவளை மனிதன்வசமாக்குகிறுர்கள் என்றஇரகசியம் விவேகிகளுக்குப் புலப்படும்.

கா:-நல்லது ; மேல்விருத்தாந்தமென்ன?

ச:- பிறகு மணமகன் தன்னுடைய அகங்கையைக் கீழாகவிரித்து அதன் மேல் மணப்பெண்ணின் கையைவைத்துப் பாணிக்கிரகணம் செய்துகொள்ளவேண்டும். மணமகன் மணமகளிடம் பெண் குழந்தைகளே பிறக்கவேண்டுமென்று விரும்பினல் அவளுடைய விரல்களைமட்டும் பிடித்துக்கொள்ளவேண்டும். ஆண்குழந்தைகளே பிறக்கவேண்டுமென்ற எண்ணமிருந்தால் பெண்ணின் கட்டைவிரலை உயர்ந்துநிற்கச்செய்து மணமகன் தன் கட்டைவிரலாற் சுற்றிப்பிடித்துக்கொள்ளவேண்டும். பாணிக்கிரஹணகாலத்தில் மணமகன் மணமகளைநோக்கி "உன்னிடம் குணவான்களான குழந்தைகள் பிறக்கும்படி தேவர்கள் ஆசிர்வதிக்கட்டும்" என்ற கருத்தடங்கிய மந்திரங்களை ஜெபிக்கவேண்டும்.

கா:-ஆஹா! மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. முதலில் மணமகள் கை மேலும் மணமகன்கை கீழுமாகப் பாணிக்கிரஹணம்செய்ய வேண்டுமென்ற விதியானது, வாழ்நாண்முழுதும் புருஷனுடைய வீட்டிற் பெண்ணுக்கு ஏற்றமும் கௌரவமும் இருக்கவேண்டுமென்பதைத் தெளிவாய் விளக்குகிறது.ஐயோ! இதை இக்காலத்தில் ஒருவரும் அறிந்தார்களில்லையே. பெண்களை விலைக்கு வாங்கிய பொருள்களைப்போல் நடத்துகிறுர்களே! இது பெரும்பாவமல்லவா?

ச:- சாஸ்திர விதிப்படி மணம்புரிந்த பெண்களை மேன்மையாக வைத்துக்கொள்ளவேண்டும். எந்த வீட்டில் பெண்களின்கண்கள் கலங்குமோ அந்தவீடு நிர்மூலமாய் நசித்துவிடும் என்று மனுஸ்மிருதியிற் கூறியிருக்கிறது.

கா:-பிள்ளை பிறக்கவேண்டுமானல் கட்டைவிரலையும், பெண்பிறக்கவேண்டுமானல் மற்ற விரல்களையும் பிடிக்கவேண்டுமென்கிற முறையும் உசிதமாயிருப்பதாகவே புலப்படுகிறது. அனுபவத்தில் விரல்களில் ஒன்றிரண்டு இல்லாவிடினும் குற்றமில்லை; கட்டைவிரல் இல்லாவிடின், விரல்களுக்கும் சரீரத்துக்கும் சக்தி குன்றிவிடுகிறது என்பது யாவரும் அறிந்தவிஷயமே. விரல்களோடு கட்டைவிரல் சேர்ந்தால் தான் மனிதர்கள் முக்கியமான காரியங்களைச் செய்யவல்லராகிறார்கள். ஆதலின், பலமுள்ள கட்டைவிரல் ஆண்மையைக் குறிப்பதாகவும் மெல்லியவிரல்கள் பெண்மையைக் குறிப்பதாகவும் மஹரிஷிகளுக்குப் புலப்பட்டு விதியேற்படுத்தியது அழகாயிருக்கிறது. மேலும் வடமொழியில் கட்டைவிரலைக்குறிக்கிற அங்குஷ்டம் (அங்குஷ்டம்) என்ற பதம் பொருளால் அஃறிணையாயினும் உயர்திணையாண்பால்விகுதிசேர்த்தே பிரயோகிக்கப்படவேண்டும்; விரல் என்று பொருள்படுகிற அங்குளி என்ற பதம் உயர்திணைப் பெண்பால் விகுதிசேர்த்தேபிரயோகிக்கப்படவேண்டும் என்ற கோட்பாடும் மேற்காட்டிய பாணிக்கிரஹண நியமத்திற்கு அனுகூலமாயிருக்கின்றது.

ச:- வடமொழியிற் பதங்களுக்குப் பொருள் எவ்வாறாயினும், சப்தங்களுக்கு ஆண் பெண் அலி என்ற பகுப்பு இயற்கையிலேயே ஏற்பட்டுள்ளது. ஆதலால் அந்தப்பதங்களைச் சரியானபடி உச்சரிக்க முடியாதவர்களுக்கு அநேகதீமைகள் நேரிடுகின்றன. அந்தப் பாஷையைப் பரம்பரையாய்ப் படித்துவருகிற நல்லொழுக்கமுள்ள அந்தணரிற்சிலரும், அக்ஷரம் ஸ்வரம் இவற்றை நாவினல் பிரயோகிப்பதில் தவறி எதிர்பாராத ஆபத்துக்குள்ளாகிறார்கள் என்னும் காரணத்தினலேயே, உச்சாரணவழுவினல் உண்டாகும்பாவங்களைப் போக்குவதற்கு அந்தணர்கள் வருஷத்துக்கொருதரம் ஆயிரத்தெட்டுமுறை காயத்ரிஜெபம் செய்து வருவதும், ஒவ்வொரு சடங்கின்முடிவிலும் உச்சரிப்பில் நேர்ந்தவழுக்களுக்காகப் பிராயச்சித்த ஹோமம் செய்துவருவதும் எல்லாரும் அறிந்தவிஷயமே.

கா:- நல்லது; அப்படி எந்த மஹான்களுக்காவது உச்சாரணவழுவினல் தீமைவிளைந்ததாகத் திருஷ்டாந்தம் கூறமுடியுமோ?

ச:- தேவர்களில் மிகவும் பிரசித்திபெற்ற துவஷ்டாவென்பவர் 'இந்த்ர சத்ரு'என்கிறமொழியை உச்சரிப்பதில் ஸ்வரம் தவறித் தாம் எதிர்

பார்த்தவற்றுக்கு முழுதும் மறுதலையான பலனை அனுபவித்து ஆபத்தினால் மிகவும் வருந்தினர் என்று வேதமே கூறுகிறது.

கா:—அம்மா! இதுகேட்க எனக்கு மிகவும் பயமுண்டாகிறது. வடமொழியை ஒழுக்கமுள்ள அந்தணர்களே சொல்லவேண்டும் என்ற கோட்பாட்டின் ரகஸ்யம் இப்பொழுதுதான் நன்குவிளங்குகிறது. ஐயோ! நுட்பமான ஆராய்ச்சியும் பகுத்தறிவுமில்லாத சிலர் ஞானமில்லாமல் வடமொழியையும் எல்லோரும் சாதாரணமாய்ப் படிக்கலாமென்று வாதாடுகிறார்களே! தமிழ்ப்புலவர்களில் எந்த மஹான்களாவது இக்கருத்தையறிந்து வெளியிட்டிருக்கிறார்களா?

ச:— திருவள்ளுவர், வடமொழி எல்லாராலும் படிக்கக்கூடியதன்று என்ற காரணத்தினால், சதுர்வித புருஷார்த்தங்களையும் அறம், பொருள், இன்பம், வீடு என்று பிரித்து அவற்றினியல்புகளனைத்தையும் குறுகத்தரித்தகுறளால் உலகத்தார்க்குப் புகட்டியிருக்கிறார்.

கா:—இது எதனால் விளங்குகிறது?

ச:— குறளின்சிறப்பைக்குறித்துச் சங்கத் தான்றோரிலொருவராகிய வெள்ளிவீதியார்,

"செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
வதற்குரியா ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரியா ரல்லாதா ரில்

என்று கூறியிருப்பதனால் விளங்குகிறது.

கா:—அம்மா! இப்பொழுது இது நன்குவிளங்குகிறது. உலகத்தில் அகங்காரமெல்லாம் அறியாமையாலேயே உண்டாகிறது. வேதத்தை உச்சரிப்பதில் மிகவும் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டியதுதான். வடமொழியைப் பக்தியுடன் படிப்பதற்கு விரோதம் ஒன்றுமில்லையே. பூர்வத்தில் வடதேசத்தில் இந்தப்பாஷையை எல்லோரும் பேசியதாகவும், அந்தணனொருவன் கூறிய வடமொழியில் தச்சனொருவன் பிழைகளை எடுத்துரைத்ததாகவும் மஹாபாஷ்யத்திற் சொல்லியிருக்கிறது. பாணினிமுனிவர் உலகத்தில் இவ்விதமும், வேதத்தில் இவ்விதமும் வடமொழியை உபயோகிக்கவேண்டுமென்று தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார்.

(தொடரும்)

ர. கிருஷ்ணமாசாரியர்,
வித்யாநிதி,

மதுரைத் தமிழ்ச்சங்கத்தார்

**1921-ம் ௵ மார்ச்சு-மீ 5-உ நடத்திய,**

# ஆங்கிலத் தமிழ்ப்பரீக்ஷை வினா.

## ஸ்கூல்பைனல்வகுப்பு.

## 1 இலக்கியம்.

பரீக்ஷகர்:—ஆ. கார்மேகக்கோனார்.

1921-௵ மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பகல் 10—1.

[அம்சம் 120]

I. 1.

தாமரை புரையும் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப

ஏம வைகல் எய்தின்றால் உலகே. இதற்குப் பதவுரை யெழுதிக் குன்றின்நெஞ்சுபகவெறிந்தவரலாற்றையுஞ் சுருக்கி எழுதுக.

2. குறுந்தொகை, திருவாசகம், காசிகாண்டம், திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், இவைகள் எப்புலவர்களாற் பாடப்பெற்றன?

3. பொற்கிழிதூக்கிய பாண்டியன் யார்? இவ்வரலாற்றைச் சுருக்கமாய் உரைக்க. இக்கதையினை உரைக்கும் வேறு நூல்கள் எவை?

4 "பீடுடை யுணர்வான் மிக்கோர் பிஞ்ஞகன் சமாதியாலே
நாடிய பொருள்தே ராமல் நல்லன தமக் கியைந்த
பாடிய கவிதை கொண்டு பார்த்திவன் திருமுன் னேறிக்
கூடிய மகிழ்ச்சி யோடுங் கூறினர் தேறியாங்கு"
இச்செய்யுளுக்குப் பொழிப்புரை எழுதுக.

5. ஆலவாயுடையாரும் நக்கீரனாரும் வாதம் நிகழ்த்தியபோது அவர்கள் கூறிய செய்யுள்கள் யாவை? சிவபெருமான் தருமிக்குப் பாடிக்கொடுத்த பாசுரம் யாது?

II. 1. கலம்பகம் என்று அந்நூலுக்குப் பெயர்வரக் காரணமென்? மறம், அம்மானை என்றாலென்ன?

2. "நாராயண னறியா நாதரரு ணேசருக்கு
வாரார் சிலைகலைமெய் மாதங்கம் அம்மானை"
இவற்றின்பொருளை விளக்கி யெழுதுக.

3. 'தாயே தந்தையிற் சிறந்தாள்' எதனால்?

4. 'சான்றோர் சான்றோர் பாலராப' இப்பொருளுக்குக் காட்டியிருக்கும் உவமை என்ன?

5. இராமர் விபீடணனைக்குறித்துத் தம் கருத்துரைத்திருக்கு மாற்றை வசனத்தில் எழுதுக.

III. 1. "மாற்கடஞ் சூழ்ந்த வைப்பி னங்கதன் மருங்கு காப்ப
நாற்கட லுடுத்த பாரி னுயகன் புதல்வ னுமப்
பாற்கடல் சுற்ற விற்கை வடவரை பாங்கு நிற்பக்
கார்க்கடல் கமலம் பூத்த தெனப்பொலி வானைக் கண்டான்"
பொலிவான் யார்? கண்டது யார்? பொழிப்புரையும் எழுதுக.

2. இடைக்காடாது நண்பர் யார்? இடைக்காடர் தமிழறியும் பெருமானிடம் எவ்வாறு முறையிட்டார்?

3. பிரமனினும் புலவர்கள் எதனாற் சிறந்தவர்கள்.

4. கல்வி எத்தன்மையாற் கருந்தனமாகிறது.

5. பொன்னிக்குக் கம்பன் அடிமை! என்பதைக் கம்பர் எவ்வாறு பொருள்விரித்துக் காட்டினர்?

6. திருப்பாணாழ்வாரென எதனாற் பெயர்வந்தது, அவர்செய்த தொண்டு யாது?

7. பாதாதிகேசம், ஸ்ரீவத்ஸம், காயகசார்வபௌமர், பகவந்நியமனம், ஆநவரதபாவனே, தௌதவஸ்திரம் இச் சொற்றொடர்களை விளக்குக.

IV. 1. "கள்ளிக்கு முள்வேலியும் கழுதைக்குக் கடிவாளமும் ஏன்" "குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டாற்போல்" இப் பழமொழிகள் எச் சந்தர்ப்பத்துள், பிரயோகப்பட்டிருக்கின்றன?

2. ஸர். தி. முத்துசாமி ஐயருடைய கல்வித்திறமை, நியாயாதிபத்தியம், பரோபகாரசீலம் இவற்றைப்பற்றிஎழுதுக.

3. அரங்கநாதமுதலியார் தமிழ்ப்பாஷையிலும் விற்பன்னர் என்பதைக் காட்டுதற்கிருக்குஞ்சான்று யாது? அவரைப் பற்றி ஸர். முத்துசாமி ஐயரும் டாக்டர் மில்லர்துரையும் எவ்விதம் புகழ்ந்துரைத்திருக்கிறார்கள்?

4. ஸ்ரீதத்தன், நக்கட்டன், நபுலவிபுலர், அச்சணந்தியாசிரியர் இவர்களைப்பற்றித் தெரிந்ததை யெழுதுக.

5. ஜீவகன் எத்தனை பெண்டிர்களை மணந்தான்? நந்தகோன் முன் கோவிந்தையாளை மணந்துகொள்வதாக உடன்பட்ட ஜீவகன் பதுமுகனுக்கு அவளை ஈந்தது அவனது வாய்மைக்கும் சால்புக்கும் பொருந்துவதா?

6. சொக்கன், வெந்து, வேட்டு, தேத்து, தொடை, ஆன்ற, கேண்மை—இப் பெயர்களிலும் எச்சங்களிலும் பகுதிகளை எடுத்துக் காட்டுக.

7. சடிலம், ஆசு, பீடு, தாளம், திருமுகம், சீயம், வைகல், ஓதிமம், நல்குரவு, கிழி, நிரயம், துகிர் பொருள் எழுதுக.

---

# வைரப்புறக்கணிப்பு.



சென்ற மேமாதத்தில் பம்பாயிற்கூடிய இந்தியப்பெண்மக்கள் பெருங் கூட்டத்திற் சிலகாரணங்களால் அந்நியநாட்டு வைரக்கற்களை நாம் புறக்கணிக்கவேண்டுமென்றும், இனி வைரநகைகளை நம்பெண்மக்களணியாமலிருக்கும்படி கேட்டுக்கொள்ளவேண்டுமென்றும் முடிவுகள் செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அம்முடிவுகளாவன:—

I. அன்னியநாட்டு வைரங்களை அடியிற்கண்ட காரணங்களை உத்தேசித்து உடனே பஹிஷ்கரிக்க வேண்டியது தேசக்ஷேமத்திற் கின்றியமையாததென இம்மகாநாடு அபிப்பிராயப்படுகின்றது:—

(1) வைரங்கள் அநேகமாகத் தென்னாப்பிரிக்காவிலுள்ளசுரங்கங்களிலிருந்தேவருகின்றன. அங்கு ஆசியாக்காரர்கள் மிருகங்களிலும் கேவலமாக நடத்தப்பட்டுவருகிறார்கள். வெள்ளைக்காரர்களே உயர்ந்தவர்களென்ற இறுமாப்பு அங்கு நிலைத்துவிட்டது. மகாத்மா காந்தியையும் அவரது தர்மபத்தினியையும் இந்தியர்களையும் மிகவும் கேவலமாக நடத்திய அந்த நாட்டிலுள்ள வெள்ளைக்காரர்கள் அனுப்பும் வைரங்களை நமது கைகளால் தீண்டுவதுகூடப் பெரும் பாவமாகும். எனவே அந்த நாட்டிலிருந்து வரும் வைரங்களை வாங்குவதானது இந்தியா தனது மானத்தைப் பறிகொடுப்பதற்கு ஒப்பாகும்.

(2) வைரநகைகளுக்கு நடுத்தரவகுப்பினருக்குள் அபிலாஷை அதிகமேற்பட்டுவிட்டதாவென்பது சந்தேகமாயினும், வைரநகை அணிவோர், அணியாதார் என்று அவர்களை இரு பிரிவினராகச் செய்துவிட்டது.

(3) நமதுதேசம் மிகுந்த தாரித்திரியதசையிலிருக்கையில் அன்னியநாட்டுவைரங்களை வாங்கி நமதுபணத்தைப் பிறநாடுகளுக்கு அனுப்புவது நியாயமன்று.

(4) தென்னாப்பிரிக்காவிலுள்ள சுதேசிகளை மிகுந்தகஷ்டப்படுத்திச் சுரங்கங்களில் வேலைசெய்வித்து வெள்ளைக்காரர்கள் ஏராளமாக லாபம் சம்பாதித்துவருவதால் ஆப்பிரிக்காவில் எடுக்கப்படும் வைரங்களை வாங்குவதனால் நாம், வெள்ளைக்காரமுதலாளிகள் ஆப்பிரிக்கா சுதேசிகளைக் கஷ்டப்படுத்துவதற்கு ஆதரவளிப்பவர்களாவோம்.

II. அன்னியநாட்டு வைரங்களிழைத்த நகைகளை நகைகளாக ஆலயங்களில் உபயோகித்துவரும் வழக்கத்தையும் ஆலயங்களின் பஞ்சாயத்தார்கள் உடனே நிறுத்தி, ஜூன்மாதம் 30-ம் தேதிக்குள் அவைகளை எல்லா இந்திய திலகர் சுயராஜ்யநிதியில் சேர்த்துவிடும்படி இம்மகாநாடு கேட்டுக்கொள்ளுகிறது. அவ்விதம் சேர்க்கப்படும் நகைகளை இந்நிகழ்ச்சிக்கு எவ்வித விக்கினமுமின்றி அவர்கள் விநியோகம் செய்துவிடுவார்கள்.

III. ஐரோப்பிய மார்க்கெட்டுகளில் வைரங்களுக்குப் பிரியம் குறைந்து வியாபாரம் அங்கு படுத்துப்போய்விட்டதனாலும், கையிலுள்ள சரக்குகளை வியாபாரிகள் இந்தியாவிற் குவித்துவருவதாலும், வைரங்களின்விலை கூடிய சீக்கிரத்தில் இறங்கிவிடுமென்று நம்புவதற்கு ஆதாரமிருப்பதாலும், வைரங்களை வாங்கி ஏமாந்துபோய்விடாமலிருக்கும்படி இம்மகாநாடு இந்திய மகாஜனங்களுக்கு எச்சரிக்கை செய்கிறது.

IV. மேலேகண்ட தீர்மானங்களின் விவரங்களை உலகெங்கும் பிரசித்தம் செய்யவேண்டுமென்றும், முக்கியமாக ஸ்திரீகளை இனி வைர நகைகளுக்கு ஆசைப்படாமலிருக்கும்படி கேட்டுக்கொள்ளவேண்டுமென்றும் இம்மகாநாடு தீர்மானம் செய்கிறது.

என்பனவாம்.

வைரங்களைப் புறக்கணிக்கவேண்டுமென்பதற்கு மேற்காட்டிய முடிவுகளிற்சொல்லுங்காரணங்களேயன்றி வேறுசிலகாரணங்களுமுள்ளன.

அந்நியநாட்டுவைரங்களை வாங்குவதால் நாம்கொடுக்கும் விலைப்பொருளுக்கீடாக அவ்வைரங்கள் நமக்குக்கிடைப்பதாற் பொருள்நஷ்டமில்லையென்று சிலர்சொல்லக்கூடுமாயினும், நாம்கொடுக்கும் விலைப்பொருளானது கொடுக்கல் வாங்கல்களிலும் வர்த்தகத்துறைகளிலும் சென்று வளர்ச்சியடைதற்குரிய நாணயப்பொருளாயிருக்கிறது; அதற்கு வதிலாக வாங்கும் வைரங்கள் யாதொருவளர்ச்சிக்கு மிடமில்லாத கற்சில்லுக்களாயிருப்பதால் வாங்கியநாண்முதல் மிகுந்தபொருளின் வட்டிநஷ்டத்தையுண்டாக்கிக்கொண்டேயிருக்குமியல்பையுடையனவாயிருக்கின்றன. இதனையறிந்து அந்நியதேசத்தார் மிகுதியான வைரங்களையுடையவர்களாயிருந்தும் அவைகளைத் தாமே நகைசெய்துவைத்துக்கொள்ளாமல் விற்றுக்கொண்டிருப்பதே விலைகொடுத்துப் பெற்றுக்கொள்ளக் கூடாதென்பதைக் காட்டுகிறது.

அன்றியும், பெரும்பாகம் தரித்திரமே குடிகொண்டிருக்கும் இந்நாட்டில் வைரநகைகள்மிகுந்தால் அவற்றைக் கையடக்கமா யெளிதிலடித்து கொண்டுபோகச் சமயம்பார்க்கும் மோசநாசத்திருடர்களும் வழிப்பறிக்காரர்களும் களவுநகைவாங்கும் துஷ்டர்களும் இவர்களுக்குதவியாகும் சோம்பேறிகளும் மிகுந்து நாடுகேடடைவதற்கும் ஏதுவாகும். ஆனால் வட்டிவளர்ச்சியையும் வர்த்தகமுறைகளையும் விரும்பவேண்டாத பெரும்பொருள்படைத்த பாதுகாப்புடைய ராஜஸ்தானங்களிலும், தேவஸ்

தானங்களிலும் அழகொன்றையே விரும்பி ஆபரணங்களுக்கு உபயோகிப்பது தவறாகமாட்டாதென்றாலும், குடிவாழ்க்கையிலிருப்பவர்கள் கோடீசுவரராயிருந்தாலும் அவர் தமதிஷ்டமித்திரபந்துஜனங்களுக்கும் ஏழைகளுக்கும் தர்மஸ்தாபனங்களுக்கும் பொதுநன்மைகளுக்கும் உபகரித்தற்குதவியான பொருள்வளர்ச்சிக்கு விரோதமாகப் பெரும்பொருளை முடக்கும் வைரநகைகளைப் புறக்கணிப்பது தகுதியுடையதென்று தோன்றுகிறது.

வைரநகைகளை மிகவு முபயோகிப்பவர்களும் அவற்றில் மிகுந்த விருப்பமுடையவர்களுமாகிய நம்பெண்மணிகளே வைரமணிகளைப் புறக்கணிக்க முன்வருவதானது நம் நாடு முன்னேற்றமடையத்தொடங்கியிருக்கிறதென்பதற் கறிகுறியாயிருக்கிறது.

---

உ

# புத்தகமதிப்புரை.

1. திருப்புகழ் முதற்பாகம்: இது திருப்பாதிரிப்புலியூர்வித்வான் சிவசிதம்பரமுதலியாரவர்களால் நன்குபரிசோதிக்கப்பெற்று வடக்குப்பட்டு, த. சுப்பிரமணியபிள்ளையவர்களாற்பதிக்கப்பட்ட இரண்டாம்பதிப்பைத்தழுவிச் சில சீர்திருத்தங்களுடன், புதிதாய்அகப்பட்ட இருபத்தைந்துபாடல்களையும்சேர்த்து சஙு௦ பாட்டுக்களுடையதாய் ஸ்ரீமத். வ. சு. சண்முகம்பிள்ளை, செங்கல்வராயபிள்ளை யென்னுமிவர்களால் மூன்றாமுறையாகப் பதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு முகவுரைகளும், இந்நூலாசிரியராகிய அருணகிரிநாதரது சரித்திரச்சுருக்கமும் தெளிவாக நன்கறியும்படி ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கின்றன. திருப்புகழ்ச்சிறப்புப்பாயிரமான முன்னோர்பாடல்களும் சில சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆங்காங்கு அறியவேண்டும்விடயங்களுக்குக் கீழ்க்குறிப்பும் ஸ்தலவிவரணமு மெழுதிச்சேர்க்கப்பட்டுள்ளன. இறுதியிற் பாட்டுக்களுக்கு முதற்குறிப்பகராதியு முள்ளது. இது நல்லகாகிதத்திற் செவ்வையாகஅச்சிடப்பட்டிருக்கிறது. இதன்விலை ரூ 2. வேண்டுவோர் ஸ்ரீமத் வ. சு. சண்முகம்பிள்ளையவர்கள், 292 லிங்கசெட்டிதெரு, சென்னை என்ற விலாசத்துக்கு எழுதிப்பெறலாம்.

2. ஸ்ரீராமகிருஷ்ணவிஜயம்:—இப்பெயருடன் ஒரு மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை, மைலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ணமடத்திலிருந்து ரௌத்திரி௵ தைமீ முதல் மாதந்தோறும் (ராயல்ஸைஸில்) 32 பக்கம் உடையதாக வெளிவருகிறது. இதில் இதுவரை நான்குபகுதிகள் வெளிவந்துள்ளன. இதில் ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸர், விவேகானந்த ஸ்வாமிகள் முதலிய ஸமரஸஸன்மார்க்கநெறிநின்றொழுகிய பெரியோர்

களின் வைபவமும், அவர்களருளிய உபதேசத்திரட்டும், பிறமததூஷணமில்லாத வேறு பல அரியவிஷயங்களும் வர்த்தமானமும் நல்ல எழுத்திற் றிருத்தமாய் அச்சிட்டு வெளியிடப்படுகின்றன. இது தக்க பண்டிதர் பிரபுக்கள் முதலியோரின் ஆதரவால் வளர்ந்து உலகத்துக்குப்பயன்படும்படி எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவானாக. இதன் வருடச்சந்தா உள்நாடுகளுக்கு ரூபா மூன்று. வெளிநாடுகளுக்குரூபா நான்கு. தனிப்பிரதி உள்நாடுகளுக்கு ரூ0—5—0. வெளிநாடுகளுக்கு ரூ0—6—0. வேண்டுவோர், மானேஜர், ராமகிருஷ்ண விஜயம், மைலாப்பூர், சென்னை என்ற விலாசத்துக்கு எழுதிப் பெறலாம்.

---

3. கதாரஸமஞ்சரி:—இது, கும்பகோணம் நகர உயர்தரகலாசாலையுபாத்தியாயர் ஸ்ரீமத் S. எக்ஞஸ்வாமி அவர்களாலும் ஸ்ரீமத் M. M. நாராயணஸ்வாமிஐயரவர்களாலும் கலாசாலை மாணவர்க்கு நல்லொழுக்கம், ராஜபக்தி, தேசபக்தி, அறிவு முதலியவற்றை விருத்திசெய்யுமாறு எளிதிற் பொருள்விளங்கக்கூடிய சிறந்தநடையில் நல்லகாகிதத்திற் றிருத்தமாய் அச்சிட்டு வெளியிடப்பட்டதொரு கதைக்கொத்தாம். இதனைக் கலாசாலையதிகாரிகள் மாணவர்க்குப் பாடபுத்தகமாக அங்கீகரித்து இதனை ஆக்கியோர்க்கு ஊக்கமளிப்பார்களென்று நம்புகிறோம். இதன் விலை ரூ0—4—0. வேண்டுவோர் ஆக்கியோர்க்கு எழுதிப் பெறலாம்.

4. பெற்றோரும்பிள்ளைகளும்:—இது, முடிகொண்டான் ஸ்ரீமத் M. நாராயணஸ்வாமி ஐயரவர்களால், பெற்றோர்கள் பிள்ளைகளைப் பழக்க வேண்டியமுறையையும், பிள்ளைகள் பெற்றோர்களிடம் நடக்கவேண்டிய முறையையும் விளக்கித் தக்க மேற்கோள்களுடன் சிறந்தநடையி லெழுதப்பட்டிருக்கிறது. கீழ்வகுப்பு மாணவர்க்கு மிகவும் பயன்படத்தக்கது. இதன் விலை ரூ0—1—0. வேண்டுவோர் ஆக்கியோர்க் கெழுதிப் பெறலாம்.

5. கோன்றைவேந்தனும் அன்னையும்பிதாவும், பழையவுரையுடன்:—இவை, சென்னைப் பச்சையப்பன்கல்லூரித் தமிழ்ச்சங்கத்தாரால் வெளியிடப்பட்டன. இதுபோலப் பிறதமிழ்ச்சங்கங்களும் இயன்ற வளவு தமிழ்நூல்களை அச்சிட்டு வெளியிடின், தமிழ் கூடிய விரைவில் நன்னிலைக்கு வருவதுடன், தமிழ்நூல்களும் திருத்தம் பெறும். சென்னைப் பச்சையப்பன்கல்லூரித்தமிழ்ச்சங்கம் இன்னும் பலநூல்களை அச்சிட்டு உலகத்துக் குபகாரமாகுமென்று நம்புகிறோம். இதன் விலை ரூ0—4—0. வேண்டுவோர், காரியதரிசி, பச்சையப்பன் கல்லூரித்தமிழ்ச்சங்கம், சென்னை என்ற விலாசத்துக்கு எழுதிப் பெறலாம்.

பத்திராதிபர்.

முதலியவற்றுக்கு இழுக்கங்கூறுதல். திங்களை நாய்குரைத்தாற்போலும் என்றது திங்களை இரவிற்கண்டு நாய் குரைப்பதுகொண்டு அத்திங்களுக் கொரு திருட்டுத்தன்மையுண்டென்று உலகங்கொள்ளா துபேக்ஷிக்கு மாறுபோலப் பெரியாரைச் சிறியார்கூறுந் தகவன்மை அவர்பாலுண் டென்று உலகங்கொள்ளாது உபேக்ஷிக்கு மென்றவாறு. இதன் பழ மொழி, "சந்திரனைக்கண்டு நாய் குலைக்கிறது" எனப் பெரியாரையிகழுஞ் சிறியாரைக் குறித்து உலகவழக்கில் வழங்கப்பட்டுவருகிறது.

150. ஆற்றுந் தகைய வரசடைந்தார்க் காயினும்
வீற்று வழியல்லால் வேண்டினுங் கைகூடா
தேற்றார் சிறியா ரெனல்வேண்டா நோற்றார்க்குச்
சோற்றுள்ளும் வீழுங் கறி.

எ-து, எல்லாச்செல்வங்களையுந்தரவல்ல தகைமையையுடைய வரசுகளை யடைந்தார்க்கேயாயினும் புண்ணியமுள்ளவழியல்லது விரும்பிமுயலினுஞ் செல்வங்கள் கைகூடா; அறிவுடையாரல்லார் குணத்தாற்சிறியரேயாதலி னிவர்க் காவதொருசெல்வ மில்லையென் றிகழவேண்டா; நோற்றார்க்குத் தாமுண்கின்ற சோற்றுள்ளேயுந் தேடிவருந்தாமே கறிவந்துவிழு மாதலானே யென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருவரது நிலைமையினிழிவுபற்றி வறியரென்று இகழலாகாதென்கிறது. அரசுகளையடைதலாவது அரசியல் நடத்தற் குரிய உத்தியோகங்களையுடையராதல்;இங்கு அரசென்றது அரசியல் நடத் தற்குரிய உத்தியோகங்களுக்கானமையால் ஆகுபெயராயிற்று புண்ணிய முள்ளவழியல்லது என்றது புண்ணியமுள்ளவழியல்லாத துர்ப்பாக் கியமுள்ளவழியென்றவாறு. அன்னமக்கு மறுதலைப்பொருளுண்மையால் இவ்வாறு பொருளுரைத்துக் கொள்ளத்தக்கது. அல்லாக்கால் தடை யூழாகிய துர்ப்பாக்கியமில்லாதவழியும் முயற்சிக்குப் பயனில்லையென் னும்பொருளுடையதாய், முயற்சியைவிதிக்கும் வாக்கியங்களோடு முரண் படுமென வறிக. வீறுடைமைக்குக் காரணமாகிய புண்ணியம் வீறெனப் பட்டது. வீறு-மேம்பாடு. வேண்டினும் எனக் காரியம் காரணமாயுபச ரிக்கப்பட்டது. கைகூடாவென்றது செல்வமடைதற்கு உத்தியோகமே காரணமென்போர்க்கு அது பிறழ்ச்சியுடையதெனக் காட்டியவாறு. தேற் றார் என்றது 'தேற்றாவொழுக்கம்' என்புழிப்போலத் தவிவினைபுணர நின்றது. சோதனையிற்றேறிய கல்வியறிவுடையவரல்லார் என்பது கருத்

தாகக்கொள்க. குணம்—செல்வமடைதற்குரிய சீலம். அது, பெரியாரிடத்துப் பணிவு, நல்லொழுக்கம் மடியின்மை முதலியன. அவற்றுற் சிறியராதல்—அவை பெரிதுமிலராதல். ஒரு செல்வமில்லை என்பது ஒருசெல்வமுமில்லை என்றிருக்கவேண்டும். நோற்றார்க்கு என்றது துய்க்குமூழுண்டாக நோற்றார்க்கு என்றவாறு. உண்கின்றசோறு—உண்ணும்படி கலத்திற் படைக்கப்பட் டுண்டுகொண்டிருக்குஞ்சோறு. தேடிவாராதாமே கறி வந்துவிழுதலாவது பரிமாறுவார் கூடையிலிருந்த கறியறியாது அதிற் சோறெடுத்துப்படைக்க அச்சோற்றில் மறைந்திருந்த கறி யிடுவோருமறியாது படைக்கப்பட்டுக் கிடத்தல். இது, கற்றுத்தேறிப் பொருள்தேடு மாற்றலில்லாதார் வேண்டுவன துய்க்கப்பெறுர் என்பார்க்கு அதுவும் பிறழ்ச்சியுடையதெனக் காட்டியவாறு. தொகுத்துண்ணு மாற்றலிலராயினுந் துய்க்குமூழுளவழிச் சோற்றுள்ளுங் கறி தானேவிழத் துய்ப்பர்; அதுபோலக் கல்வியிற்றேறிய அறிவுடையரல்லராயினும் திருவுடையராக நோற்றார்க்குச் செல்வமுண்டாவது ஒருதலை யாதலால் அவரை வறியரென்றிகழலாகாதெனப் பொருண்முடிவு கூறுக. "நோற்றார்க்குச், சோற்றுள்ளும் வீழுங்கறி" என்பது இதன் பழமொழி. சோற்றுள்ளும் என்னும் உம்மை பிறவாற்றானும் வருதலி னெளிமையுணர்கின்றது.

151. வழங்கலுந் துய்த்தலுந் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப அதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்.

எ-து, பிறர்க்குக்கொடுத்தலுந் தானுகர்தலுஞ் செய்யமாட்டாதான்பெற்ற முழங்குமுரசினையுடையசெல்வம், முழங்காநின்ற அருவிகளையுடைய வேய் முற்றி முத்துதிரும்வெற்பனே! அது நாய்பெற்ற தெங்கம்பழத்தோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, நன்றியில்செல்வத்தின் இழிவுகூறுகிறது. பிறர்க்குக் கொடுத்தலாவது அறப்பொருட்டாகவும் பொருட்பொருட்டாகவும் பிறர்க்குக்கொடுத்தல். தானுகர்தலாவது ஐம்புலவின்பங்களு மாரத்துய்த்தல். தேற்றாதான் எனக் காரியம் காரணமா யுபசரிக்கப்பட்டது. செய்யமாட்டாதான்—செய்யவல்லனல்லாதான். வல்லனாயிற் செய்யாதிரான் என்பது குறிப்பு. 'பெற்ற முழங்குமுரசுடைச்செல்வம்' என்றது துய்த்து வழங்குதற்கேற்றவாறு கைவசப்பட்டிருக்கும்

செல்வமிகுதியைக் காட்டியபடி. நாய்பெற்ற தெங்கம்பழத்தோடொக்கு மென்றது நாய்க்கு ஒரு தேங்காய்மூடிகிடைத்தால் அதைப் பிறிதொன் றற்கும் கொடாது, ஓடுநீங்க உடைத்துண்ணுமாற்றலின்மையாற் றானும் நுகரமாட்டாது அபிமானித்து அதைக் கவ்விக்கிடப்பினும் அந்நாய்க்கு அது தக்காதொழிவதுபோல, வழங்கலுந்துய்த்தலு மில்லாதான்பெற்ற முழக்குமுரசுடைச்செல்வத்தை அவ னபிமானித்திருப்பினும் அவற் கது தக்காதொழியுமென்றவாறு. "காயே பழமே"* என்றதனால், தெங்கம் பழம் எனப்பட்டது. "காய்மாண்டதெங்கின்பழ"† மென்றார் பிறரும். "நாய்க்குத் தேங்காய் தக்குமா" என்பது இதன் பழமொழி. தக்கல்—உடையோனுக்குரியதாகி நிலைபெறல்.

152. ஆவிற் கரும்பனி தாங்கிய மாலையுங்
கோவிற்குக் கோவல னென்றுலகங் கூறுமாற்
றேவர்க்கு மக்கட் கெனல்வேண்டா தீங்குரைக்கு
நாவிற்கு நல்குர வில்.

எ-து, ஆநிரைக்குவந்த வருந்துயரைக்கெடுத்த திருமாலையும் பசுநிரைக் கே தக்க இடையனென் றுலகத்தார்கூறுநிற்பர்; ஆதலாற் றேவர்க்குரைக்கு முறையிது; மக்கட்குரைக்குமுறையிது என்று வேறுபடுக்கவேண்டுவதில்லை; ஒருவரைத் தீங்குரைக்குமிடத்து நாவிற்கு நல்குரவில்லை யென்றவாறு.

(குறிப்பு) இது, இழிவுரைதருவதாயிருப்பினும் தம் குலத்தொழில் தவிர்தலாகாதென்கிறது. ஆ—எல்லா ஆக்கங்களுக்குங் காரணமாகிய பசு. ஆக்கம்—இம்மைக்குப் பொருளும் போகமும், மறுமைக்குப் புண்ணியமும். வந்த அருந்துயர்—தேவராஜகோபத்தால் வந்த கன்மாரி யின்றாக்குதலானாகிய தீர்த்தற்கரியதுயர். தாங்கியமால்—அவ்வாநிரை மேற் றாக்காது மலையைக் குடையாகப்பிடித்துத் தன்மேலதாம்படி தாங் கிய உயர்வறவுயர்ந்தபெரியோனாகிய திருமால். பசுநிரைக்கேதக்க இடை யன் என்று என்றது பிறிதொருசெயலுக்குந் தகுதியின்றிப் பசுநிரை மேய்ப்பதற்கேயுரிய இடையர்குலத்தவன் என்ற பொருள்படக் கோபா லன் கோவிந்தன் என்று என்றவாறு. உலகத்தார்கூறுநிற்பர் என்றது உயர்ந்தோரு மிழிந்தோருமாகிய உலகத்துள்ளோரெல்லாருங் கூறுநிற்பர்

---

* தொல்-பொருள். மரபியல்; சூத்திரம் அஅ.

† சிந்தாமணி-நாமகளிலம்பகம், செய்-2.

என்றவாறு. இடையன் என இழிவுரைபயப்பதாயிருப்பினும் ஆநிரை மேய்த்தலாகிய தனது குலத்தொழிலைத் திருமாலும்புரிந்தமையால் அவ ரவர் சாதிதர்மமாகிய தொழிலை இழிவுரைக்கஞ்சிக் கைவிடலாகாதென் பது கருத்து. தேவர்க்குரைக்கு முறையிது மக்கட்குரைக்குமுறை யிதுவென்று வேறுபடுக்கவேண்டுவதில்லை என்றது குணமே யொருங் குடையாரும் குற்றமே யொருங்குடையாரும் உலகத்தின்மையால் உயர்ந் தோர்க்குப் புகழ்ந்துரையொன்றேயுள்ளது, இழிந்தோர்க்கு இகழ்ந் துரையொன்றே யுள்ளது, என வரையறுக்கு நியதியில்லையென்றவாறு. ஒருவரைத் தீங்குரைக்குமிடத்து நாவிற்குநல்குரவில்லை என்றது யாரா யிருப்பினும் ஒருவரைத் தீங்குரைக்கக்கருதினல் ஒருதீங்குமில்லாதா ருலகத்தின்மையால் அவர்க்குள்ளதீங்கை யெடுத்துரைக்குநாவிற்கு அவர்பாலுள்ளதீங்குதனை யுணர்த்தவல்ல சொற்செல்வம் மிகவும் உள்ளது என்றவாறு. எல்லாக்குலத்தொழிலுக்கும் ஒருவாற்றான் இழிவுரைத் தற்கும் இடமுண்டென்பது கருத்து. இதன பழமொழி "நாக்குக்கு நிரப்பில்லை" என்றிருந்து அது இக்காலத்து 'நாக்குக்கு நரம்பில்லை' எனச் சிதைந்ததுபோலும்.

153. பூந்தண் புனற்புகார்ப் பூமிகுறி காண்டற்கு
வேந்தன் வினவினன் மாந்தரைச்—சான்றவன்
கொண்டதனை நாணி யுறைத்தலாற் றன்கண்ணிற்
கண்டதூஉ மெண்ணிச் சொலல்.

எ-து, பூந்தண்புனலினையுடைய புகாரின்கணுள்ள விளைநிலத்தை யின்ன துணையென்றறிதற் கிருவாருமாந்தரை வேந்தன்வினவினவிடத்து மற்றொரு வன் களவினாலாண்டுவருகின்றநிலத்தையறிந் தந்நிலத்தைநீக்கிக்கரந் தித்துணை நிலமுள்ளதென் றொருசான்றவ னரசற்குச்சொல்லி யந்நிலங்கரந்தாள்கின்ற வனைப பிழைப்பித்தானாதலாற் றன்கண்ணாற்கண்டு தெளியவறிந்ததனையுஞ் சொல்லலாஞ் சொல்லலாகாதென் றாராய்ந்துசொல்லுகவென்றவாறு.

(குறிப்பு) இது, உண்மையேயாயினும் தீங்குபயப்பதனைச்சொல் லற்கவென்கிறது. புகாரின்கணுள்ள-புகார்நகரைச்சார்ந்துள்ள. வின வினவிடத்து-எத்துணை செய்யுண்டென்று வினவியவிடத்து. சொல்ல லாம், சொல்லலாகாது என்றாராய்தலாவது நன்மைபயக்குமென்று தோன்றுவதுகொண்டு சொல்லலாமென்றும், தீமைபயக்குமென்று தோன்றுவதுகொண்டு சொல்லலாகாதென்றும் தெளிதல். 'பூந்தண்புனற்

புகார்........மறைத்தலால்' என்றது தீமைபயக்குஞ்செய்தியைச் சொல்ல லாகாதென்பதற்குச் சிஷ்டாசாரமாகிய திட்டாந்தங் காட்டியவாறு. இங்கு ஒருவன் கரந்தாள்கின்றநில மித்துணையெனச் சான்றவ னறிந்து கொண்டானாயினும் அதனைக் காட்டிக்கொடுத்தாற் கரந்தாள்கின்றவ னுக்கு உயிர்க்கிழதியாகிய தீமையுண்டாகுமென்று மறைத்தமையா லிது பொய்ம்மையாகாது வாய்மையாயிற்று. "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்-தீமை யிலாத சொலல்" "பொய்மையும் வாய் மை யிடத்த புரைதீர்ந்த-நன்மை பயக்கு மெனின்"* எனபன பொய்யா மொழி. "கண்ணிற்கண்டதானலு மெண்ணிச்சொல்லவேண்டும்" என்ப திதன் பழமொழி. கண்ணிற்கண்டதானலுமென்றது உண்மை யென்று நன்றாயுணரப்பட்டிருப்பினு மென்றபடி. எண்ணிச் சொல்ல வேண்டுமென்றது இதைச்சொல்வதனால் விளைவது நன்மையா? தீமையா? என்றாராய்ந்து நன்மைவிளையுமென்று தெரிந்தால் அதனைச் சொல்லலாம்; தீமைவிளையுமென்றுதெரிந்தால் அதனைச் சொல்லலாகா தென்றவாறு.

154. இஞ்சி யடைத்துவைத் தேமாந் திருப்பினு
மஞ்சி யகப்படுவ ராற்றாதா-ரஞ்சி
யிருள்புக் கிருப்பினு மெய்யே வெருஉம்பு
ளிருளி னிருந்தும் வெளி.

எ-து, மதிலினையடைத்துவைத் தாளுடையேமென்றிருப்பினும் பகை வர்க்காற்றமாட்டாதா ரஞ்சி யகப்படுவர்; இரவின்க ணிருளிலேயிருந்தாயினும் தன்னச்சத்தாலே வெளியின்கணிருந்தாற்போலக் கூகை காக்கைக் கஞ்சு மென்றவாறு.

(குறிப்பு) இது, ஆற்றாதழிந்தார்க்கு அரணில்லை என்கிறது. பகைவர்க்கு ஆற்றமாட்டாதார் என்றது முன்பு ஒருகாற் பகைவரொடு பொருது ஆற்றமாட்டாதழிந்துபோந்தவர் என்றவாறு. அகப்படு வர் என்றது முன்பு தாம் ஆற்றாதழிந்த அச்சத்தால் அப்பகைவரை எதிர்த்தடர்க்குமாற்றலின்றி யவர்க்ககப்படுவர் என்றவாறு. "அச்ச முடையார்க்கரணில்லை" என்பது குறள்†. இரவின்கண் இருளிலேயிருந்த

* திருக்குறள். 30-ஆம் அதிகாரம், வாய்மை 1, 2.

† திருக்குறள்-டுச-ஆம் அதிகாரம், பொச்சாவாமை ச.

தாயினும் என்பதற்குக் காக்கை இரவின்கண், கூகைக்கு உண்மையாகவே அஞ்சி இருளிலே மறைந்திருந்தாயினும் என்பது கருத்தாகக்கொள்க. இது 'அஞ்சவெய்யே யிருள்புக்கிருப்பினும்' என்றதன் கண்ணழிப்பு. அஞ்சி யிருள்புக்கிருப்பினும் என்ற குறிப்பாற் காக்கை என்னும் எழுவாய் வருவிக்கத்தக்கது. இதனாற் பகைவலிகுறைதற்கும் தன்வலிமிகுதற்கும் சாதகமானகாலத்திலும என்பது குறிக்கப்பட்டது. 'வெருவுடம்புள் இருளினிருந்தும் வெளி' யென்பதற்கு, முன் பகற்காலத்திற் காக்கையாற்குத்துண்டு வெருவாநிற்குங் கூகை, தனக்கேயரணான இருளிலேயிருந்தாயினும் தன் அச்சத்தாலே தன்பகைக்கேயரணான வெளியின்கணிருந்தாற்போலக் காக்கைக்கு அஞ்சும் எனப் பொருள்விரித்துரைத்துக்கொள்க. இது எடுத்துக்காட்டுவமை. 'வெருளுங்கூகை யிருளிலுமஞ்சும்' என்பதுதன் பழமொழி. "பகல்வெல்லுங் கூகையைக் காக்கை"* 'அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்றார்'† என்பன முன்குத்துண்ணாதகூகையுங் காகமுங் கூடியவழியும், இப்பழமொழியிற்கூறியது முன் குத்துண்ட கூகையுங் காகமுங் கூடியவழியுமாகிய வழிவேறுபாடுண்மையால் மாறுபாடின்மை யறிக.

155. ஆற்ற வினைசெய்தார் நிற்பப் பலவுரைத்
தாற்றுதார் வேந்தனை நோவது—சேற்றுள்
வழாஅமைக் காத்தோம்பி வாங்கு மெருதாங்
கெழாஅமைச் சாக்கா டெழல்.

இ-ள், போரின்கண் ஆற்றவல்லராய் வினைசெய்தார்நிற்பப் போரின்கட்புக் கொருவினைசெய்யமாட்டாதார் வேந்தனைப் பலவுரைத் தொருசிறப்புச்செய்திலனென்றுநோவது, சேற்றின்கண் வழுவி யழுங்காமைகாத்துப் போற்றி யிழுக்குமெருது புடைபெயர்த்துசொல்லாமைச் சாக்காடுசென்றதுபோலு மது வென்றவாறு.

(குறிப்பு) இது, வினைமாட்சியில்லாதார்க்குப் பரிசில்லை என்றது. இப்பாட்டினுள்ளும், உரையுள்ளும் 'சாக்காடு' என்றிருப்பது 'சாகாடு' என்றிருக்கவேண்டும். சாகாடு-சகடம். ஆற்றவினைசெய்தார்க்குச் சேற்றுள்வழாமைக்காத்தோம்பிவாங்குமெருதும், ஆற்றாதார்க்குச்

---

* திருக்குறள் சக-ஆம் அதிகாரம், காலமறிதல் க.

† கம்பராமாயணம், பாலகாண்டம், கார்முகப்படலம் செய்-23.

சாகாடும் உவமங்களாம். எருது புடைபெயர்ந்துசெல்லாமை என்றது சகடிழுத்த எருது பரிசுவேண்டிச்செல்லாதிருக்க என்றவாறு. சாகாடு சென்றதுபோலும் என்றது சகடம் தனியே பரிசுவேண்டியெழுந்து செல்வதுபோலும் என்றவாறு. கழுத்துநோவ இழுத்த வெருதிருக்கச் சகடு தனியே பரிசுக்கெழுவது அயுக்தமும் அசம்பாவிதமு மாவது போல வினைமாட்சியி னாற்றுவார் வாளாவிருக்க ஆற்றுதார் பரிசுக்கெழுவது அயுக்தமு மசம்பாவிதமுமாதலா லவர்க்கு அது அளிக்கலாகாதென்பது கருத்து. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

156. தன்னலி கிற்பான் றலைவரிற் றானவர்க்குப்
பின்னலி வானைப் பெறல்வேண்டு—மென்னதூஉம்
வாய்முன்ன தாக வலிப்பினும் போகாதே
நாய்முன்ன தாகத் தகர்.

எ-து, தன்னைநலியவல்லான் றன்மேற் படையெழுவனுயி லவற்குப் பின்னர்நின்று நலிவானைத் தானமைத்துளனுதல்வேண்டும்; வாய்முன்னதாம்படி பிணித்திர்ப்பினுந் தகர் தன்முன்னே நாய்வர யாதும் போகாதாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, வலியோரைச் சார்ந்திருக்கவேண்டுமென்கிறது. "வாய்முன்னதாகவலிப்பினும்போகாதே, நாய்முன்னதாகத்தகர்" என்றது செய்யுள்வடிவாயமைந்த பழமொழி. இதில் நாய் அணிகருதாது நின்ற திட்டாந்தமானமையால் உபமானமையாகாதென அறிக. நாய்முன்னதாகத் தகர் எதிர்த் தப்போகாதவாறுபோலப் பின்னலிகிற்பான்முன்னர்த் தன்னலிகிற்பான் பகைத்துப்போகான் எனப் பொருளொடுபொருத்தியுரைத்துக் கொள்க. பின்னர்நின்றுநலிவானைத் தானமைத்துளனுதலாவது, தம்பின்னர்நின்று தன்பகையைநலியவல்லவலியானைத் தனக்குரியனுயமைத்துக்கொண்டிருத்தல். தகர்-யாட்டுக்கடாய்.

157. வலியாரைக் கண்டக்கால் வாய்வாளா ராகி
மெலியாரை மீதூரு மேன்மை யுடைமை
புலிகலாங் கொள்யானைப் பூங்குன்ற நாட
வலியலாத் தாக்கு வலித.

எ-து, தம்மில்வலியாரைக்கண்டக்கால் வாயா லொன்றும்பேசாராகித் தம்மின்மெலியாரைக்கண்டா லடர்த்துச்செல்லுமேம்பாடுடைமை, புலியொடுகலாங் கொள்ளும் யானையையுடைய பூங்குன்றநாடனே! வலிதன்றுமக்களாம் வலிதாயினவாறுபோலு மென்றவாறு.

(குறிப்பு) இது, மெலியாரைமீதூரலாகாதென்கிறது. வலியார்—அறிவு, ஆண்மை பெருமைகளாற் றன்னின்மிக்கார். வாய்வாளாராகி என்றதில் வாயும் என்னும் இழிவுசிறப்பும்மையை விரித்து வாயானும் ஒன்றும் பேசாராகி எனப் பொருளுரைத்துக்கொள்க. அடர்த்துச் செல்லுதல்-வலியப்பகைத்து மேற்செல்லுதல். மேம்பாடுடைமைஎன்றது மீதூர்வான்கருத்தாற்சொல்லும் மேன்மையாகிய செம்பொருளும், கவி கருத்தாற்சொல்லும் இழிதகைமையாகிய குறிப்பும் ஒருங்குணர்நின் றது. வலிதன்றுமக்கலாம் வலிதாயினவாறுபோலும் என்றது 'சிறிய கலகம் பெரிய பகையானாற்போலும்' என ஓரிதிகாசமடியாகவந்த பழமொழிப்பொருளைச்சுட்டித் திட்டாந்தங்காட்டியவாறு. அது பிரசித்தி பெற்ற ராமராவணயுத்தகாரணமான ராக்ஷஸாக்கிரமணமென்க. இது மெலியாரை வலிய மேற்சென்றுவருத்தலும், 'மெலியார்மேன்மேகபகை'* என்பது மேற்சென்ற மெலியாரை யெதிர்த் தொறுத்தலுமாகிய வேறுபாடுண்மையான் மாறுபாடின்மையறிக. இதன் பழமொழி, 'குட்டிக்கலகம் குடியைக்கேடுக்கும்' என வழங்கப்படுகிறது.

158. மறுமைபொன் றுண்டோ மனப்பட்ட வெல்லாம்
பெறுமாறு செய்ம்மினென் பாரே—நறுநெய்யுட்
சட்டி யடைபைக் கனிவித்துக் கண்சொரீஇ
யிட்டிகை தீற்று பவர்.

எ-து, 'மறுபிறப்பென்பதொன் றுண்டோ? மனத்தாற்காதலித்தனவற்றை யெல்லா நுகரப்பெறுமாற்றைச் செய்ம்மி' னென் றொருவர்க் குறுதியாகவுணரச் சொல்லுவார், நறுநெய்யட்டோய்த்த பாகுபெய்தவடையை நுகராமற்காத்துக் கண்ணினைசொருகுவித் தொருவனை யிட்டிகையைத் தீற்றுவிக்குமதனேடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, சிற்றினத்தார்பேச்சுக்குச் செவிகொடுக்கலாகா தென்கிறது. மறுபிறப்பென்பதொன் றுண்டோ வென்றது இம்மையில் விதிவழியொழுகுவார் மறுமையிற் றேவராய்ப்பிறந் தின்புறுவர் என்னும் ஆஸ்திகவாதத்தை நம்பற்க; அவ ரவ்வின்பநுகர்தற்கேதுவாகக் கூறும் மறுமையென்பதேயில்லையே என ஆச்சிரயாசித்தியாற் பரமத நிரசனங்காட்டியவாறு. உண்டோ என்னும் ஓகாரம் எதிர்மறைப்பொருளில்வந்தது. மனத்தாற் காதலித்தனவற்றையெல்லாம் நுகரப்பெறுத

* திருக்குறள் அஎ-ஆம் அதிகாரம், பகைமாட்சி க.

பேராசைக்கள்ளத்தையுள்ளேயடக்கிப்பிறருக்கெல்லாம்
பாராசையற்றவர்போற்றிரிவேன்பசுத்தோல்புனைந்து
போராசைகொண்டபுலிநானென்னாசையைப்போக்குகண்டா
யோராசையுமற்றயோகீகுற்றாலத்துறைபவனே. (61)

கழிக்கும்பலபொழுதோர்பொழுதாய்க்கலங்காமலுள்ளே
விழிக்கும்விழிவெளியாவதென்றோவெண்ணிலாக்கதிரைப்
பழிக்குந்த்ரிகூடத்தருவிநன்னீர்பகலோனைவெம்மை
யொழிக்குந்திவலைதெளிக்குங்குற்றாலத்துறைபவனே. (62)

செருமிக்கவலையுளந்தமொறித்தினம்பொருமிப்
பொருமிக்கரைவதுகண்டிரங்காய்புல்லும்பூடுங்கல்லுந்
தருமிக்கபட்சிமிருகங்களாதிசராசரமு
மொருமிக்கத்தெய்வவடிவாங்குற்றாலத்துறைபவனே. (63)

சிறையோபடுவதினிக்கவையோவினந்தான்படுதன்
முறையோமுறையிடல்கேட்கிலையோமுன்னைநாளிற்செய்த
குறையோகுறையுன்முன்னேநிற்குமோகொண்டகோபமென்றோ
உறையோங்குகொண்டலுலாவுங்குற்றாலத்துறைபவனே. (64)

தண்டேன்மலர்சொரிசண்பகச்சோலையுஞ்சந்நிதியும்
பண்டேபழகுநின்சித்ராநதியும்பலவளமுங்
கண்டேபிரிந்துந்தரித்தேனென்போலொத்தகன்னெஞ்சர்தா
முண்டேநின்கற்பனைக்குள்ளேகுற்றாலத்துறைபவனே. (65)

பொறுக்கும்படைகொண்டுகோபத்தைமாய்த்துப்புரையற்றுநான்
வெறுப்புவிருப்பற்றிருப்பதென்றோவண்டம்விண்டுகிறு
கிறுக்கும்படிமலையைச்சிலையாக்கிக்கிளர்புரங்க
ளொறுக்குந்தனிப்பெருவீராகுற்றாலத்துறைபவனே, (66)

வருக்காம்பலகரும்பைப்பார்க்கநன்றெருவட்டெனவே
பெருக்காசைவிட்டுநின்றாளேபாவிப்பிறவியின்வேர்
கருக்காமலென்றுமென்சிந்தைக்குள்ளேயொருக்காற்றெளிவு
மொருக்கான்மயக்கமுமாமோகுற்றாலத்துறைபவனே. (67)

தருகோடியம்புயத்தாடொழும்போதுசதுரயுக
மிருகோடியுநொடிப்போதொக்குமேதுன்பமீட்டுங்கவ்வை
யருகோடியுன்னைப்பிரிந்தாலரைநொடிப்போதுமெனக்
கொருகோடிகோடியுகந்தாண்குற்றாலத்துறைபவனே, (68)

காண்பதெல்லாங்கண்மயக்கமென்றேமனக்கண்டிருந்தும்
வீண்பலகௌவைக்குளோடியதால்வந்துமீட்டருள்வாய்
சேண்படர்கங்கைச்சடையாய்பிரமன்சிரத்திலென்று
மூண்பலிதேடுங்கரத்தாய்குற்றாலத்துறைபவனே. (69)

கண்பார்த்துச்சோரமிடுங்கள்வரைவர்கைகள்ளமிட்டுப்
பண்பார்த்ததுன்னைப்பணிவதென்றோபுயல்பார்த்துநின்று
விண்பார்க்குஞ்சாதகம்போலுன்னைப்பார்த்துநின்மெய்யருட்பா
லுண்பார்க்குஞானப்பெருக்கேகுற்றாலத்துறைபவனே. (70)

சிறுகாலந்தாயர்முலைப்பான்மயக்கஞ்செகத்தறிவு
பெறுகாலமாதர்முலைமேன்மயக்கம்பெருங்கிழமா
யிறுகாலம்வஞ்சப்பிணியான்மயக்கமுன்னின்பத்தைநா
னுறுகாலமாவதெக்காலங்குற்றாலத்துறைபவனே. (71)

ஆணவங்காட்டுவித்தாசையுங்காட்டுவித்தார்க்குமில்லா
நாணமுங்காட்டியமாயையினால்நெடுநாட்கருத்தை
வீணவம்போக்கிவிட்டேனிரங்காய்கடல்வெவ்விடத்தி
னூணலங்காரமிடற்றாய்குற்றாலத்துறைபவனே. (72)

கருநோயுங்கன்மப்பிறவிப்பிணியுங்கருத்திற்கவ்வை
பொருநோயும்பூண்டசரீரத்தினோய்களும்போக்குந்தெய்வத்
திருநீருடையநின்சித்ராநதிக்கரைசேர்ந்தவன்றே
யொருநோயுமின்றித்தவிர்ந்தேன்குற்றாலத்துறைபவனே. (73)

மறைப்பொருளானநின்சேவடிவாழ்த்திவடவருவித்
துறைப்புனலாடிக்குழல்வாய்மொழியுடன்சோதியுன்னை
யிறைப்பொழுதாகிலுமுன்னேதியானித்திருக்கநெஞ்சி
லுறைப்பில்லையேயென்னசெய்வேன்குற்றாலத்துறைபவனே. (74)

செய்வதெல்லாங்குற்றமேயதனாற்செகத்தோர்களென்னை
வைவதெல்லாங்கொடுந்துட்டனென்றேகட்டவல்வினையா
னைவதெல்லாமுன்பொருட்டேசரண்புக்குநானினிமே
லுய்வதுநின்பொருட்டையாகுற்றாலத்துறைபவனே. (75)

தேயாமயக்கந்தெளிந்தோர்கண்முன்னந்தெளிவொன்றில்லாப்
பேயாகநின்றபிதற்றுவனேமனப்பேதமையான்
மாயாமலத்துக்குள்வீணேகிடந்துமயங்குமிந்த
வோயாமயக்கந்தவிர்ப்பாய்குற்றாலத்துறைபவனே. (76)

எளியேனையாட்டுஞ்செயல்யாவுமுஞ்செயலென்றுநன்றாய்த்
தெளியேனெவ்வாறுதெளிவிப்பையோதிரையேவரையே
வெளியேமறிபுனலேகனலேநெடுவானகமே
யொளியேபரந்தவெளியேகுற்றாலத்துறைபவனே. (77)

அடக்கிக்கொண்டாலுள்ளடங்கிக்கொள்வேன்புவியாதிக்குநீ
நடத்திக்கொண்டாலுநடந்துகொள்வேனன்றிநானென்றென்னைத்
தொடக்கிக்கொண்டாட்டமிடாதேசகலதொழிற்குமெண்சா
ணுடக்கைக்கொண்டாட்டியசித்தாகுற்றாலத்துறைபவனே. (78)

எழுதிண்புவியுகொடிக்கேறுஞ்சிந்தையெருதுமங்கோர்
பொழுதென்னொருமடக்கேறிவராதுபுலன்கலப்பை
பழுதன்றிச்சேர்க்கவல்லேனல்லனான்பரமாநிலத்தி
லுழுதுண்டுவாழ்வதெவ்வாறோகுற்றாலத்துறைபவனே. (79)

பிறர்பொருளாசித்துப்பொய்பேசிச்சாணும்பிழைப்பதற்கா
யறமுதனான்குநிலைபிழைத்தேனடியார்க்கடிமைத்
திறமிலனாகிலுநின்னடியார்திருக்கூட்டமல்லா
லுறவினிவேறிலையாள்வாய்குற்றாலத்துறைபவனே. (80)

கொலைபாதகஞ்செய்யக்கற்றேனுன்பத்தர்குழாத்திற்செல்ல
மலையாதவுண்மைவரக்கற்றிலேனெனைவாழ்விப்பையோ
நிலையாரணங்களுக்கெட்டாதநாதநெடுவெளிக்கே
யுலையாதவானந்தக்கூத்தாகுற்றாலத்துறைபவனே. (81)

ஆலமென்றாலுமமுதாமுனைக்கண்டவாடரவின்
கோலமுமாலையின்கோலமதாங்கொடியேன்வினையுங்
காலமுஞ்சாலநன்றாவதென்றோவரைகாலருவி
யோலமென்றார்க்குந்துறைசூழ்குற்றாலத்துறைபவனே. (82)

தொண்டென்றுனக்குப்புரியேன்மகளிர்சுரிகுழற்கே
வண்டென்றுமாலையென்றுஞ்சுழல்வேனெனைவாழ்விப்பையோ
விண்டொன்றும்வெள்ளிப்பொருப்பாய்விருப்பும்வெறுப்புமில்லா
யுண்டென்றவர்மனத்துள்ளாய்குற்றாலத்துறைபவனே. (83)

வன்பெருங்காயமெடுத்தவர்யார்க்கும்வருவதின்பத்
துன்பங்கள்கூடத்தொடர்ந்தல்லவோதொடர்ந்தாலுமித்தை
யென்பரஞ்சாட்டியிடையாமலொன்றுபட்டென்றைக்குநா
ணுன்பரஞ்சாட்டியிருப்பேன்குற்றாலத்துறைபவனே. (84)

செகந்தோறுஞ்சென்றுசெனித்தலுத்தேன்சென்மந்தோறும்புல்லர்
முகந்தோறுஞ்சென்றலுத்தேனிரங்காய்முனிவோர்மடவா
ரகந்தோறுமுண்பலிக்காய்நடந்தாயயன்மாலென்றிங்கே
யுகந்தோறும்பேர்பெற்றிருந்தாய்குற்றாலத்துறைபவனே. (85)

சென்னிறவேழமுகத்தெம்பிரானையுந்தென்னிலஞ்சிப்
பன்னிருகையனையும்பயந்தாய்வெற்பரசன்பெற்ற
கன்னியைக்கைவசமாக்கிக்கொண்டாயென்கருத்தையெல்லா
முன்னிருதாள்வசமாக்காய்குற்றாலத்துறைபவனே. (86)

வாலத்தனையுமொடுக்கிமிக்காய்வினைவாய்பிளந்து
காலக்கடும்புலிபாயுமுன்னேசெண்பகாடவிக்கே
யேலக்குழன்மடமாதொடுநீயுமிருந்ததிரு
வோலக்கங்காட்டியருளாய்குற்றாலத்துறைபவனே. (87)

பத்தியுமில்லைவயிராக்கியமில்லைபாரிலுண்மைச்
சத்தியமில்லைதவமாகிலுமில்லைசார்ந்தகுணப்
புத்தியுமில்லைகொடியேனிருந்துர்ப்புத்திக்குநீ
யொத்திருந்தெப்படியாள்வாய்குற்றாலத்துறைபவனே. (88)

பழுக்குமுன்னேயுடல்நொய்க்குமுன்னேபஃதத்தாவியெல்லா
நழுக்குமுன்னேயுட்கிநாறுமுன்னேநமன்பாசத்தினா
விழுக்குமுன்னேகண்கண்மூடுமுன்னேயிரதங்கடைவா
யொழுக்குமுன்னேவந்துதோன்றாய்குற்றாலத்துறைபவனே. (89)

குருவாக்கியங்கள்கல்லேன்பத்தர்கூடுங்குழாத்திற்செல்லேன்
றிருவாக்குமுண்மைதெளிந்தில்லேன்றெளிவேதுமின்றி
பெருவாக்கிடுமெலும்பானேன்முழுப்பித்தனென்னையுமோ
ருருவாக்கிவிட்டெனையாள்வாய்குற்றாலத்துறைபவனே. (90)

சுகதுக்கபாசத்தினாலேபிறவித்துவட்சிக்குநான்
முகம்வைத்தமோசந்தவிர்ந்திடவேமுதலந்தமிலாப்
பகலுற்றசுத்தவெளிக்கேயிருக்குநின்பாதபத்ம
யுகபத்திமுற்றுந்தருவாய்குற்றாலத்துறைபவனே. (91)

வினைப்பாதகர்க்குண்முழுப்பாவியாகியும்வெட்கமின்றி
யெனைப்பார்க்கயார்மிக்கரென்றெண்ணுவேனுன்னையென்றுமொன்றாய்
நினைப்பாரிகழ்ச்சிமகிழ்ச்சிவந்தாலுநிலைமைவிடா
ருனைப்பாரஞ்சாட்டியிருப்பார்குற்றாலத்துறைபவனே. (92)

எனதெனக்கென்றுதவிப்பதல்லாலுனையெண்ணுதற்கென்
மனதுசற்றாகிலுமுண்மையுண்டோவஞ்சனேனுமுன்னைத்
தனதுபட்டாதிக்கம்போலேதமிழ்க்கவிசாற்றுவது
முனதுகட்டாயத்தொழில்காண்குற்றாலத்துறைபவனே (93)

முடக்கிட்டுமாயப்பிறவிக்குள்ளேவிட்டுமூட்டியென்னைத்
துடக்கிட்டுநானென்றுபேச்சிட்டதென்வரைசூழ்ந்துவட்டக்
கடற்குட்டமிட்டபுவனிக்கெல்லாமொருகம்பத்திலே
யுடக்கிட்டசூத்திரதாரீகுற்றாலத்துறைபவனே. (94)

அன்பதுவைத்துனைப்போற்றுகிலேனடியார்க்கெளியா
யென்பதுசற்றுங்கருத்திலுன்னேனெனையாட்கொள்வையோ
முன்பதுமத்தயன்மாலானவர்முதலொன்றுக்கொவ்வா
வொன்பதுமானவொளியேகுற்றாலத்துறைபவனே. (95)

மலைவாய்க்குவடன்னவார்முலையார்க்குமயல்கொடுநேக்
கிலைவாய்ப்படுபுனல்போலலைந்தேனஞ்சலென்றருள்வா
யலைவாய்ப்படாததெள்ளாரமுதேதுளையாதமுத்தே
யுலைவாய்ப்படாதசெம்பொன்னேகுற்றாலத்துறைபவனே. (96)

தடுக்கும்பொழுதிலணுவளவேனுந்தடுத்துக்கொள்வாய்
கொடுக்கும்பொழுதிலெல்லாங்கொடுப்பாய்திருக்கூத்துக்குநீ
யெடுக்குஞ்சொரூபங்களாரறிவாரெனையாள்புலித்தோ
லுடுக்குஞ்சதாநந்தயோகிகுற்றாலத்துறைபவனே. (97)

நின்னாச்சிரமமுனியாச்சிரமநினதடியார்
பொன்னாச்சிரமமும்பூவாச்சிரமமும்பூமடந்தை
மன்னாச்சிரமமுமன்னுவர்காண்மனத்தாலும்வஞ்ச
ருன்னாச்சிரமபதத்தாய்குற்றாலத்துறைபவனே. (98)

திரையற்றஞானக்கடலுடையாயுனைச்சேர்ந்துசென்மக்
கரையற்றவாரிகடக்கின்றவாறுகருணைசெய்வாய்
புரையற்றதொண்டர்மனத்தேயிருந்துபொருள்விளக்கு
முரையற்றமோனவுணர்வேகுற்றாலத்துறைபவனே. (99)

நித்தர்கள்போற்றுநின்னவணிமூலத்தினெல்லைவந்து
முத்தமிழ்பாடக்கருணைசெய்தாண்டனைமுற்றுமினிக்
கொத்தடியேனுக்குன்பொற்பதந்தாகுழல்வாய்மொழியா
ளுத்தமிபாகமுவந்தாய்குற்றாலத்துறைபவனே. (100)

முற்றும்.

ஸ்ரீ

# அரும்பதவுரை.

காப்பு.

பர்வுதல்—துதித்தல். புங்கவர்—உயர்ந்தோர். தாமம்—மாலை. தந்தி—யானை. துணை—துணைவன். செந்தில்—திருச்செந்தூர். இணை—இரண்டு. சரணம்—திருவடி.

நூல்.

(1) மூவர்திருப்பாடல்-தேவாரம். வழி-முறை.குழல்வாய்மொழி-குற்றாலத் தெழுந்தருளியுள்ள அம்பிகை. வேட்கை—ஆசைப்பெருக்கு. பெண், பூமி,பொன் என்னுமிவற்றில் வேட்கையை ஈஷணாத்திரயமென்பர் வடநூலார். ஒழி—முதனிலைத்தொழிற்பெயர்.

(2) நின்வழிநில்லாமல் — உனக்கு வழிபாடுசெய்யாமல். யானெனதென்னும் வழிதனக்கேறி—அகங்கார மமகாரங்களைப் பின்பற்றிச்சென்று. இவர் தடை — பஞ்சேந்திரியங்களின் விஷயப் பிரவிர்த்தி. கனம்-பெருமை. கேள்—சுற்றம்.

(3) பரம்—இது முன்னிரண்டடியிற் பிரயோசனம் எனவும், மூன்றாமடியிற் புகலிடம் எனவும், நான்காமடியில் முழுமுதற்கடவுள் எனவும் பொருள்தந்தது. புலவி—ஊடல்.

(4) ஆக்கம்—செல்வம். எக்கம்—ஆருக்கவலை. அன்ப ரின்பக்கல்வித்தேக்கம்—தேவாரம் திருவாசகம் முதலிய நூற்பயிற்சிநிறைவு. தேறுதல்—தெளிதல். ஊக்கம்—முயற்சி—தூக்கம்—மடி.

(5) பொசிப்பு—அனுபவம். மூவர்—தாரகாசான்மக்களான வித்துன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்பார்; சுதன்மன் சுசீலன், சுபுத்தி என்றுங் கூறுவர். கோட்டை—திரிபுரம்.கொன்ற—அழித்த. மந்தகாசம்—புன்சிரிப்பு. படை—ஆயுதம்.

(6) இச்செய்யுள், "பானினைந்தூட்டு" மென்னு முதற்குறிப்புடைய திருவாசகப்பாடலை அடியொற்றியது. பகிர்தல்-பிரிதல். தரித்தல்-பொறுத்தல் பற்றுப்பசி—எவ்வளவு உணவிடினும் போதாதபசி. 'என் பற்றுப் பசிகண்டு அமுதூட்டி, நோயறப் பார்க்கவல்ல' என்பது,இப்பிறவியில் எனக்கு உண்டி முதலியன அளித்துப் பசிப்பிணியொடு பிறபிணியு மகற்றி என்னைப் பாதுகாக்கவல்ல எனவும்,என்னுடைய நீங்காத பசியை நோக்கி என்னைத் தேவனுக்கி அமுதமூட்டிப் பசி நரை திரை மூப்புப் பிணி முதலியவற்றைப் போக்கிப் பாதுகாக்க வல்ல எனவும், நிரதிசயானந்தத்தையடைவதில்எனக்குள்ள நீங்காத ஆசைமிகுதியை நோக்கித் தனது கருணாம்ருதத்தை எனக் கூட்டிப் பிறவிப்பிணியொழியக் குளிரக்கடாக்ஷிக்கவல்ல எனவும் பொருள் தந்து, குற்றாலநாதன் தன்னைப்பணிவார்க்கு இம்மை மறுமையின்பத்தொடு வீட்டின்பமு மளிக்கவல்லனென்பதும் குறித்து நின்றது.

(7) மறையாடும் — வேதம் சொல்லுகின்ற.சிறை—இறகு. உறை—துளி.

(8) கிள்ளை—கிளி. கிருபைஇன்பால்—கருணையாகிய இனிய அமுதம். பிள்ளைகள்—குமரவேள், திருஞானசம்பந்தர் முதலியோர். வள்ளை—உலக்கைப்பாட்டு. உள்—மனம்.

(9) வேசை--பொதுமகள். 'விண்ணுளோர் பூசைபுரியும் அம்போருகத்தாள்' எனக் கூட்டுக. அம்போருகம்—தாமரை. நிறைந்தசம்பூரணம்—சருவவியாபகம்.

(11) கன்மம்— இருவினை. அரும்பி—சிறிதாகத்தோன்றி. அவா—ஆசை. ஐம்புலன்—ஐம்பொறிகளாலும் நுகரப்படும் விஷயங்கள். அவை சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. சென்மவியாதி—பிறவியாகிய பிணி (ரணம்). சத்ரமிடுதல்—அறுத்துக் காரமிடுதல்.

(12) அமயம்-பொழுது. சண்பகாடவி—சண்பகச்சோலை.

(13) தட்டழிதல்—நிலைகலங்குதல். தேங்குதல்—நிறைதல். ஓங்கார வட்டம்—பிரணவம்.

(15) ஒல்லாமல்— இகழாமல்.

(18) கௌவை—கலக்கம்.

(20) மூடு—அடிமரம். சாகை-வேதனூற்பிரிவு. அறமுதனான்கு--சதுர்வித புருஷார்த்தங்கள்; அவைஅறம், பொருள், இன்பம் வீடென்பன.

(22) பணிலமறுகு— சங்கவீதி. பவமறுகு—சென்மவீதி.

(23) அரைமாத்திரை—அரைக்கணம். கபாடஞ்செய்தல்—கதவடைத்தல்.

(24)—கான்—வாசனை. சிவமதுகங்கை-குற்றாலத்துள்ளதொரு தீர்த்த விசேடம்.

(25) கலுழன்—கருடன்.

(27) பன்னுதல்—சொல்லுதல். உன்னுதல்—நினைத்தல். போதித்தல்-அறிவுறுத்தல்.

(28) குரம்பை—கூடு (உடல்). மருண்டேன்—மயங்கினேன். சித்தாம்புயம்—மனத்தாமரை.

(29) சண்டன்—யமன்.

(30) வாதித்தல்— துன்பப்படுத்தல். கழிசல்—கழிக்கத்தகுந்தது.

(31) உழை-மான்.

(33) புரத்தல்—காத்தல். உற்பனஞானம்—உண்மை ஞானம்.

(34) அருவம்— உருவமில்லாதது. சொருவம் — உருவமுள்ளது. செரு—போர். அளித்தல்—காத்தல்.

(35) அருணாட்டம்—அருட்பார்வை. ஒன்றுமறியார் என்பது ஒன்றறியார் என்றானது விகாரம்.

(36) சென்னி—தலை. வேதா—பிரமன். விதி—நியாமகன். வித்து—விதை.

(37) பஞ்சபூதவிடயம், வெறிவிடயம் எனக் கூட்டுக. 1 விடவோ—செலுத்தவோ. 2 விடவோ—நீக்கவோ. கவுரி—பார்வதி.

(38) நலிதல்—வருந்தல். ஒடுக்கம்—அழிவு. தோற்றம்—பிறப்பு.

(40) தயா—கருணை.

(41) ஆற்பதம் என்பது ஆஸ்பதம் என்னும் வடமொழியின் சிதைவு. பற்றுக்கோடென்பது அதன்பொருள்.

(42) உரகம்—பாம்பு. சடாடவி—சடைக்காடு.

(43) தூறு—அடர்ந்தபுதர்.மனம் ஊறுபடாது—மனம் வருந்தாது.

(44) மறுக்கி—கலக்கி. சுறுக்கு--விரைவுப்பொருளுணர்த்துவதோர் குறிப்புமொழி. குறுக்கி—குறைத்து. தறுக்குதல்—செருக்குதல். மந்தி—பெண்குரங்கு. மொக்கி—தின்று. உறுக்கி—அதட்டி.

(45) அந்தி— மாலைக்காலம். காலன்—யமன். தெறுதல்-அழித்தல். அந்த்யகாலம்—முடிவுநாள்.

(46) ஆடன்மாமன்று—சிறந்த நடனசபை.

(58) இம்பர்—இவ்விடம். உம்பர்—தேவர். கானவர்—குறவர்.

(60) சடைவு— வெறுப்பு. குலாமர்—உலோபர். இடுக்கண்—துன்பம். கௌவை—செயல். ஈடழித்தல்—பெருமைகெடச்செய்தல்.

(62) பகலோன்—சூரியன். திவலை—துளி.

(74) உறைப்பு—வன்மை.

(77) வளி—காற்று.

(78) புவியாதி—நிலம் முதலியன.

(80) ஆசித்து—விரும்பி. சாண் என்றது சாணளவினதாகிய வயிற்றைக்குறித்துநின்றது. உம்மை இழிவு சிறப்பு.

(81) ஆரணம்—வேதம்.

(82) ஆலம்—விடம்.

(83) விண்டு ஒன்றும்—ஆகாயத்தையளாவிய.

(84) மித்தையென்பர்—பொய்யென்று சொல்லுவர் (பிறர்). அஞ்சு-பஞ்சகவ்வியம். ஆட்டி-அபிஷேகஞ் செய்து. இடையாமல்—வருந்தாமல்.

(87) எலம்-மயிர்ச்சாந்து.

(89) நொய்த்தல்— இளைத்தல். நழுக்கல்--மூடுபோக்கிப்பிரித்தல். உட்கி—மடிந்து.

(90) எருவாக்கிடு மெலும்பு—பயிர்க்குரமாகவிடு மென்புத்தூள்.

(91) பாதபத்மயுகம்—இரண்டு திருவடித்தாமரை.

(93) பட்டாதிக்கம்— பட்ட பாரம்பரையாயுள்ள பெருமை.

---

உ

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921 ௵ ஏப்பிரல்மாத வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1921 April | | | வரவு 1920 April | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) Donations, Contributions வகையில் வரவு ... | 100 | ... | ... | ... | ... | ... |
| (2) சங்கப் பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 19 | 4 | ... | ... | ... | ... |
| (3) Miscellaneous வரவு ... | 10 | 13 | ... | ... | ... | ... |
| மொத்தம் ரூ ... | 130 | 1 | ... | 62,367 | 9 | 9 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வரவு ... | 15 | ... | ... | ... | ... | ... |

| விவரம் | செலவு 1921 April | | | செலவு 1920 April | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) ESTABLISHMENT:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 86 | ... | ... | ... | ... | ... |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | ... | ... | ... |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 119 | 5 | 7 | ... | ... | ... |
| (d) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 60 | 10 | 4 | ... | ... | ... |
| (2) Stationery, contingencies வாங்கியவகையில் செல் ... | 9 | 10 | 2 | ... | ... | ... |
| (3) புத்தகசாலைக்கு வரும் பத்திரிகைக்குச் சந்தா செல் ... | 2 | 12 | ... | ... | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தா வரவு ... | 18 | 8 | ... | ... | ... | ... |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு | ... | 4 | ... | ... | ... | ... |
| மொத்தம் ரூ ... | 33 | 12 | ... | 161 | ... | ... |
| III Press Section: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில்நடந்த வேலைகளுக்கு அச்சுக்கூலி வரவு ... | 161 | 4 | 6 | ... | ... | ... |
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக் கிரயம் வரவு ... | 159 | 2 | ... | ... | ... | ... |
| (3) Miscellaneous வரவு ... | ... | 8 | ... | ... | ... | ... |
| (b) Binding | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு, பைண்டிங் சார்ஜ் வரவு ... | 85 | 7 | ... | ... | ... | ... |
| மொத்தம் ரூ ... | 406 | 5 | 6 | 265 | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (4) சங்கக்கட்டடவகையரா ரிப்பேர் சம்பந்தமாகச் செலவு ... | ... | 8 | 6 | ... | ... | ... |
| (5) தபால்,தந்திவகையில் செல் | 11 | 11 | 3 | ... | ... | ... |
| (6) புத்தகப்பிரசுர சம்பந்தமாகக் காகிதக் கிரயம் அச்சுக்கூலி வகையிற் செலவு ... | 41 | 12 | ... | ... | ... | ... |
| (7) சங்கச் சில்லரை வேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | ... | 12 | ... | ... | ... | ... |
| (8) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகச் செலவு ... | 1 | 8 | ... | ... | ... | ... |
| (9) Miscellaneous செலவு ... | ... | 3 | ... | ... | ... | ... |
| மொத்தம் ரூ ... | 441 | 12 | 10 | 63,588 | 11 | 4 |
| II Editorial Section: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | ... | | ... |
| (2) செந்தமிழ்ப் பத்திரிகை சம்பந்தமாக வாங்கியகாகிதம் அச்சுக்கூலிவகையில் செலவு ... | 40 | ... | ... | ... | | ... |
| (3) தபால்,தந்திவகையில் செல் | 8 | 4 | 9 | ... | | ... |
| மொத்தம் ரூ ... | 83 | 4 | 9 | 8 | 1 | 9 |

III Press Section:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **(a) Printing.** | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 136 | 5 | ... | ... | ... | ... |
| (2) அச்சாபீசிற்கு டைப்ஸ்வகையரா வாங்கியவகையில் செல் ... | 75 | ... | ... | ... | ... | ... |
| (3) Furniture வாங்கிய வகையில் செல் ... | 25 | 12 | ... | ... | ... | ... |
| (4) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 187 | 13 | 11 | ... | ... | ... |
| (5) Miscellaneous செலவு ... | ... | 15 | 6 | ... | ... | ... |
| **(b) Binding.** | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 27 | 3 | 5 | ... | ... | ... |
| (2) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 34 | 12 | 9 | ... | ... | ... |
| மொத்தம் ரூ | 487 | 14 | 7 | ... | ... | ... |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 570 | 2 | 6 | 62,793 | 9 | 9 | ஆக மொத்தம் செலவு ரூ. | 1013 | ... | 2 | 63,596 | 13 | 1 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத் தொகை ரூ. ... | 1282 | 12 | 4 | 2028 | 15 | 3 | மாத முடிவில் மீதியிருப்புத் தொகை ... | *839 | 14 | 8 | 1225 | 11 | 11 |
| ஆகமொத்தம் ரூ. ... | 1852 | 14 | 10 | 64,822 | 9 | ... | ஆகமொத்தம் ரூ. ... | 1852 | 14 | 10 | 64,822 | 9 | ... |

*By C. Pass Book 650-0-0
Cash on hand 189-14-8

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**
AUDITOR.
5—6—21.

**LAKSHMINARAYANAN,**
*Ag. Manager.*
MADURA TAMIL SANGAM.
2—5—21.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921-௵ மேமாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1921 May | | | வரவு 1920 May | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) Donations Contributions வகையில் வரவு ... | 100 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு. | 39 | 10 | 6 | | | |
| (3) Miscellaneous வரவு ... | ... | ... | 6 | | | |
| மொத்தம் ... | 139 | 11 | ... | 118 | ... | ... |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தாவரவு | 12 | ... | ... | | | |

| விவரம் | செலவு 1921 May | | | செலவு 1920 May | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) ESTABLISHMENT:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 164 | 3 | 8 | | | |
| (b) கலாசாலைஉபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 126 | 7 | 2 | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 59 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 17 | 8 | 11 | | | |
| (3) புத்தகசாலைக்குவரும் பத்திரிகைக்குச் சந்தா செல் ... | 2 | 12 | ... | | | |
| (4) Furniture வாங்கிய வகையில் செல் ... | 2 | 12 | ... | | | |
| (5) சங்கக்கட்டட வகையராிப்பேர்சம்பந்தமாகச் செலவு ... | 57 | 5 | ... | | | |

| | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 29 | 6 | ... | | | |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு ... | 61 | 11 | ... | | | |
| மொத்தம் ... | 103 | 1 | ... | 36 | 10 | ... |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில் நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 248 | ... | ... | | | |
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 63 | 12 | ... | | | |
| (3) Miscellaneous வரவு... | 31 | 3 | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீசில் நடந்த வேலைகளுக்கு பைண்டிங்சார்ஜ் வரவு ... | 23 | 8 | ... | | | |
| மொத்தம் ... | 366 | 7 | ... | | | |

| | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|
| (6) தபால், தந்திவகையில்செலவு ... | 9 | 9 | 6 | | | |
| (7) புத்தகப்பிரசுரசம்பந்தமாகக் காகிதக்கிரயம் அச்சுக்கூலி வகையிற் செலவு ... | 1 | | | | | |
| (8) சங்கச்சில்லரைவேலைகள்சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டுக்கூலிவகையிற் செலவு ... | 3 | 8 | ... | | | |
| (9) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகச் செலவு ... | 1 | 9 | ... | | | |
| (10) Miscellaneous செலவு | 1 | 1 | ... | | | |
| மொத்தம் ... | 553 | 12 | 3 | 552 | ... | 11 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைசம்பந்தமாக வாங்கிய காகிதம் அச்சுக்கூலி வகையிற் செல் ... | 107 | 13 | ... | | | |
| (3) தபால், தந்திவகையிற்செல் | 19 | 13 | 6 | | | |
| மொத்தம் ... | 162 | 10 | 6 | 8 | 13 | 6 |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | **III Press Section:** | | | | | | |
| | | | | | | (a) Printing: | | | | | | |
| | | | | | | (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 167 | 3 | 4 | | | |
| | | | | | | (2) அச்சாபீஸிற்கு டைப்ஸ் வகையரா வாங்கியவகையில் செல் | 39 | 2 | 6 | | | |
| | | | | | | (3) ரிப்பேர் வகையிற்செலவு... | 3 | 4 | ... | | | |
| | | | | | | (4) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 80 | 1 | 7 | | | |
| | | | | | | (5) Miscellaneous செலவு ... | ... | 7 | ... | | | |
| | | | | | | (b) Binding: | | | | | | |
| | | | | | | (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 32 | 5 | 7 | | | |
| | | | | | | (2) Contingencies வாங்கிய வகையிற் செலவு ... | 44 | 4 | ... | | | |
| | | | | | | மொத்தம் ... | 366 | 12 | ... | ... | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 609 | 3 | ... | 154 | 10 | .. |
| மாத ஆரம்பத்திலிருந்த கையி ருப்புத்தொகை ... | 839 | 14 | 8 | 1225 | 11 | 11 |
| ஆகமொத்தம் ரூ ... | 1449 | 1 | 8 | 1380 | 5 | 11 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 1083 | 2 | 9 | 560 | 14 | 5 |
| மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | *365 | 14 | 11 | 819 | 7 | 6 |
| ஆகமொத்தம் ரூ. ... | 1449 | 1 | 8 | 1380 | 5 | 11 |

*By C Pass Book 250—0—0
Cash on hand 115-14-11

*Audited and found correct,*

**V. S. RAMASWAMI,**
AUDITOR,
5—6—21.

**LAKSHMINARAYANAN,**
*Ag. Manager,*
MADURA TAMIL SANGAM.
1—6—21.